

கொரோனா நிவாரணப் பணியில் 24 மனையார் | வசந்தங்கள் பூக்கும் வைகாசி மாதம் | கொரோனா தடுப்பு மருந்து விஞ்ஞானி ஆனந்த்குமார்

ரூ.20/- | மே 2020 வைகாசி | தீபம்: 8 ஒளி: 5



# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

## சுற்றுச்சூழலைப் பாதுகாப்போம்!

# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

RNI No.: TNTAM/2013/48200

தீபம்: 8 ஒளி: 5

மே 2020 வைகாசி

24 மனை தெலுங்கு செட்டியார்கள் இனமக்களுக்காக
24 மனை தெலுங்கு செட்டியார்கள் சேரிட்டபிள் டிரஸ்ட்
அறக்கட்டளையால் நடத்தப்படும் அரசியல் சார்பற்ற சமூக மாத இதழ்
24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்
கீழ்ப்பாக்கம், சென்னை - 600010.

சிறப்பாசிரியர்:
**கரூர் கே.சி.பழனிசாமி**
Ex.MP., Ex.MLA.,

ஆசிரியர்:
**Dr. துரை அங்குசாமி**
M.A.,B.L.S.,B.Ed.,Ph.D.,

40 லட்சம் மக்களின் நாடித்துடிப்பு
24 மனை குலமுரசு மாத இதழ்

**ஆண்டுச் சந்தா ரூ. 200/-**

**ஆண்டு சந்தா செலுத்தும் முறை**

Account Name : 24 MANAI KULAMURASU
Bank Name : CANARA BANK
Branch : CHENNAI KILPAK
Account Number : SB. A/c. 1650101014869
IFSC CODE : CNRB0001650

மேற்கண்ட வங்கிக் கணக்கில் ஆன்லைன் மூலம் ரூ.200/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ 9965 900 990 என்ற வாட்ஸ்அப் (அ) kulamurasuoffice@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும்.
கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.200 + வங்கி சேவைக் கட்டணம்+GSTவரி ரூ.60 சேர்த்து ரூ.260/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் (அ) வாட்ஸ்அப் (அ) தபாலில் அனுப்பவும்.



24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.
Customer Care Cell: 9965 900 990
Ph: 04324-240663 - K.C.S.R.சிவக்குமார்
E-Mail: kulamurasuoffice@gmail.com


## ஆசிரியர் குரல்

**கருணை பொங்கும் உள்ளம் - அது கடவுள் வாழும் இல்லம்!**

உலக மனித உதடுகள் அனைத்தும்
உயிர்பயத்துடன் உச்சரிக்கும் ஒரே சொல்...
கெரோனா..

விழிக்குப் புலப்படாத விஷஜந்து கெரோனாவை
வென்றெடுக்க மத்திய - மாநில அரசுகள்
வியூகம் அமைத்து விரைந்து செயல்படும் விதம்
வெகுவாக பாரட்டிற்குரியது.

வீட்டுக்குள்ளே முடங்கிட நேரிட்டதால்
வாழ்வாதாரம் பாழ்பட்டு பல இல்லங்களில்
இல்லாமை சோககீதத்தை இசைத்தது.
ஈந்து உவக்கும் கருணை மனம் படைத்தவர்கள்
ஈரவிழிகளைத் துடைக்க கொடைகள் தந்தனர்.

விளம்பர வெளிச்சத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டு
தன்னடக்கத்தோடு இவர்கள் தந்த கொடையை
வாழ்த்துரைக்க வேண்டியது பத்திரிகை தர்மம்.

வெளிச்சப்படுத்தாதீர்கள் எனும் அவர்களின்
வேண்டுகோளையும் மீறி சிலவற்றை வெளியிட்டுள்ளோம்!

அடக்கத்துடனும் அர்ப்பணிப்புடனும்
அற்றார் அழிபசி தீர்ப்போரின் உள்ளங்கள்
ஆண்டவன் உறையும் ஆலயங்கள்!

வழிபாட்டுத் தலங்கள் பூட்டப்பட்டுள்ள இத்தருணத்தில்
வழிபட்டு மகிழ்வோம் இக்கருணை மனங்களை!



அன்புடன் உங்கள்
**துரைஅங்குசாமி**


புதிய சந்தா பதிவு செய்தல், புதுப்பித்தல், முகவரி மாற்றம் மற்றும் மணக்கோலம் பகுதியில் சேர்க்க மற்றும் திருத்தம் செய்ய தொடர்பு கொள்ளவேண்டிய செல்பேசி/வாட்ஸ்ஆப் எண்:
**99 65 900 990**
(காலை 10 மணி முதல் மாலை 7 மணி வரை)


Scan & Save Contact


24 மனை குலமுரசு இதழை முகநூலில் தொடர..
https://www.facebook.com/24manaikulamurasu

# தடைகள் வெற்றிக்கு வாசல் படிகள்



## டாக்டர் அ.ப.ஜெ.அப்துல்கலாம்

வாழ்க்கை ஒரு பயணம், பந்தயமல்ல, பயணத்தின்போது நீங்கள் எடுத்துவைக்கிற ஒவ்வொரு அடியும் சுவை நிரம்பியதாகும். எடுத்துவைக்கிற ஒவ்வொரு அடியிலும் இருக்கிறது வளர்ச்சி. ஆனால் கூடவே இருக்கிறது போட்டியும். உங்களுடைய தகுதியை நீங்கள் குறைத்துக் கொண்டு விடாதீர்கள். பிறருடன் ஒப்பீடு செய்வதில் என்ன நடக்கும் என்று கேட்கிறீர்களா? அடுத்தவரைவிட உங்களை உயர்வாகப் பார்க்கிற போது உங்களுக்குள் கர்வம் உண்டாகிவிடும். அடுத்தவரைவிட உங்களைத் தாழ்த்திப் பார்க்கிறபோது உங்களுடைய தன்மதிப்பை (Self Esteem) நீங்கள் இழக்கநேரிடும்.

நாம் எல்லோருமே ஏதாவதொரு விதத்தில் சிறப்பானவர் தாம். இயற்கை எதைப் படைத்தாலும் அது பயனுள்ளதாகவே இருக்கும். மனிதனின் கண்டுணரும் எல்லைக்கு அப்பால் சிறந்தது மோசமானது என்பதெல்லாம் அர்த்தமற்றதுதான்.

அறிவுநுட்பம் என்பது மூன்று வழிகளில் அடையப்படுகிறது.

1.சிந்தனை,

2.அனுபவம்,

3.தகுதிவாய்ந்த ஒன்றைப் பின்பற்றுதல் (Irritation).

கன்பூசியஸ் என்ற சீனதத்துவஞானி கூறுகிறார்:



அருளுரை

"சிந்தனை உயர்ந்தது, அனுபவம் கசப்பானது, பின்பற்றுதல் எளிதானது" என்று!

மற்றவர்கள் எதற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்களோ அதையே உங்களுடைய குறிக்கோளாக்கிக் கொண்டுவிடாதீர்கள். எது உங்களுக்குச் சிறந்ததோ அதை நீங்கள்தான் முடிவு செய்ய வேண்டும் ஏனென்றால் அது உங்களுக்குத்தான் தெரியும்.

உங்கள் முயற்சியை நீங்கள் நிறுத்தும்வரை எதுவும் உண்மையில் முடிந்துவிடாது. கற்றறிந்தவனிடம் துணிச்சல் இருக்கவேண்டும். உங்களை இடர்ப்பாடான நிலைகளுக்கு உட்படுத்திக் கொள்ள (Encounter risk), ஆபத்துகளை எதிர்கொள்ளத் தயங்காதீர்கள்.

மார்க் ட்வைன் கூறுவார், "துணிச்சல்' என்பது அச்சத்தை எதிர்த்து நிற்பது, அச்சத்தை வெல்வதாகும், அது அச்சமின்மை ஆகிவிடாது".

துணிச்சல் என்கிற ஏணி மூலமே ஒழுக்கப்பண்புகள் உயர்நிலை அடைகின்றன.

நான் குடியரசுத் தலைவராக இருந்தபோது ஒருசமயம் நான் 'சுகாய் - 30' ஃபைட்டர் பிளேனில் பறந்துகொண்டிருந்தேன். விமானம் லோகே கான் விமான நிலையத்திலிருந்து புனே போய்க்கொண்டிருந்தது. என்னுடைய விமான ஓட்டி அஜய் ரத்தோருடன் நாற்பது நிமிடங்கள் நான் விமானி அறையில் இருந்தேன். நாங்கள் தரையிறங்கியதும் யாரோ என்னிடம் கேட்டார்கள்,

"நீங்கள் ஒரு தைரியமான குடியரசுத் தலைவர். இருந்தாலும் எழுபத்தைந்து வயதாகிறதே, உங்களுக்குப் பயமாக இல்லையா?" என்று.

நான் சொன்னேன், "பயப்படறதுக்கெல்லாம் எனக்கு நேரம் ஏது. நான் தொடர்ந்து விமானக் கருவிகளை என்னுடைய கட்டுப்பாட்டில் வச்சுக்க வேண்டியிருந்ததே" என்று.

துணிச்சல் என்பது உங்களுக்குப் பிடித்த ஒன்றைத்தவிர வேறு எதையும் செய்யாமல் இருப்பது, அவ்வளவுதான்.

சாதனை என்பது ஒரே நாளிலா?

### பொறுப்புணர்ச்சி :

ஒரு மாணவன் கேட்டான், "ஐயா, சிறு வயதில் நீங்கள் ரொம்பவே சிரமப்பட்டிருக்கிறீர்கள். அதுவெல்லாம் உங்கள் வளர்ச்சிப் பாதையில் தடைகளாகிவிடவில்லையா?" என்று.

என் பதில் இதுதான்: "என்னுடைய தடைகளே என்னை ஊக்குவித்தன. என்னுடைய குழந்தைப் பருவம் கடினமானது என்பது உண்மைதான். நான் மூன்று ஸ்கூல்களில் படித்தேன் என்று சொல்ல வேண்டும். காலையில் ஐந்து மணிக்கெல்லாம் எழுந்துவிடுவேன். முதலில் மதரஸாவிற்குச் செல்வேன். பிறகு வீட்டுக்கு வந்து 'ஹோம் ஒர்க்' செய்வேன்.

அடுத்து சைக்கிளை எடுத்துப்போய் பேப்பர் போடுவேன். பிறகு ஸ்கூலுக்குச் செல்வேன். மாலையில் திரும்பிவந்து காலையில் போட்ட செய்தித்தாளுக்கான பணத்தை வசூலித்து வருவேன். எங்கள் வீட்டில் மின்விளக்கு கிடையாது. நான் மாலையில் படிப்பேன்.

என்னுடைய தாய் அன்பானவர். மற்றவர்களுக்குக் கொடுப்பதைவிட எனக்குக் கொஞ்சம் கூடுதலாகவே மண்ணெண்ணெய் (Kerosine) கொடுப்பார். அதை வைத்து என்னுடைய விளக்கெரிப்பேன், இரவின் பிற்பகுதி வரைக்கும் படித்துக்கொண்டிருப்பேன். ஆனால் மறுநாள் விடியற்காலையில் விழித்தாகவேண்டும் என்பதையும் மறந்துவிட மாட்டேன்'.

குடும்பநிலையை நன்குணர்ந்தபடியால் பத்திரிக்கை போட்டும், புளியங்கொட்டைகளைச் சேகரித்து விற்றும் சிறு வயதில் சம்பாதித்தேன்.



சென்னையில் எம்.ஐ.டியில் படிக்க விரும்பியபோது என்னுடைய சகோதரி தமது நகைகளை விற்று எனக்கு உதவினார்.

பின்பு, கல்லூரியில் எனக்குக் கிடைத்த உதவித்தொகை மறுக்கப் பட்டுவிடக் கூடாது என்பதற்காக, நான் செய்யத் தவறியிருந்த ஒரு ப்ராஜக்டை (Project) மூன்றே நாட்களில் செய்து முடித்தேன். இந்தப் பொறுப்புணர்ச்சிதான் என்னை முன்னேற்றப் பாதையில் செலுத்தியது.






திருப்பூர் மாவட்டம், உடுமலைப்பேட்டை ஊராட்சி ஒன்றியத்தில் ரூபாய் 11.80 இலட்சம் மதிப்புள்ள கிருமி நாசினி தெளிப்பு நவீன டிரேக்டர் இயந்திரத்தை கால்நடை பராமரிப்புத்துறை அமைச்சர், தமிழ்நாடு அரசு கேபிள் டிவி வாரியத்தலைவர் மாண்புமிகு உடுமலை K.ராதாகிருஷ்ணன் B.Com., அவர்கள் கொடி அசைத்து துவக்கிவைத்தார். உடன் BDO சுப்பிரமணி, பெரியகோட்டை ஊராட்சி மன்ற தலைர் பேச்சியம்மாள் பாலசுப்பிரமணி, அவைத்தலைவர் பி.செல்வம், கூட்டுறவு சங்கத்தலைவர் பெரியகோட்டை முருகேஷ், துணைத்தலைவர் விஸ்வநாதன், முன்னாள் துணைத்தலைவர் சுப்பிரமணி, DSP ஜெயசந்திரன், ஊராட்சி மன்ற உறுப்பினர்கள், பி.ஜெ.பி.நாகமாணிக்கம் மற்றும் ஒன்றிய கவுன்சிலர்



## போடியில் கொரோனா நிவாரணம் வழங்கும் நிகழ்ச்சி

தேனி மாவட்டம் போடி 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமூகத்தின் நிர்வாக குழு உறுப்பினரும், தலைமை சங்க வழக்கறிஞர் பிரிவின் உறுப்பினரும் 16 வீடு, மும்முடியர் கோத்திரத்தின் வழக்கறிஞர் முருகன் அவர்களின் சார்பில் நமது சமூகத்தை சேர்ந்தவர்களுக்கும் பிற இனத்தை சேர்ந்த ஏழை, எளிய, பொதுமக்களுக்கும் கொரோனா நிவாரணமாக மளிகை பொருட்களான அரிசி, பருப்பு, சர்க்கரை, மற்றும் துணிகள், முககவசம் என 50க்கும் மேற்பட்ட நபர்களுக்கு வழங்கப் பட்டது. நிவாரண பொருட்களை பெற்றுக் கொண்ட பொதுமக்கள் அனைவரும் வழக்கறிஞர் முருகனுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டனர்.

– **அ.சுரேஷ்,** குலமுரசு நிருபர், பள்ளிபாளையம்.

# வசந்தங்கள் பூப்பூக்கும் வைகாசி

வாழ்வில் வசந்தம் என்பார்கள் அல்லவா! அந்த வசந்தகாலம் என்பது சித்திரை, வைகாசி மாதங்களே.

இளவேனில் என்பது கோடைக் காலம். இளவேனில் என்றால் அழகு என்றும் பொருள் உண்டு.

ஓர் ஆண்டின் பன்னிரு மாதங்களை ஆறு பருவங்களாக வகுத்துள்ளனர்.

இளவேனில், முதுவேனில், கார்காலம், கூதிர்காலம், முன்பனிக் காலம், பின்பனிக்காலம் என பெரும்பொழுதுகள் ஆறு என்பது மரபு.

சித்திரையும் வைகாசியும் வசந்த ருது- அதாவது இள வேனிற்காலம். உத்தராயண காலத்தின் ஐந்தாவது மாதமான வைகாசி யில் வெயிலின் கொடுமை அதிகமாக இருக்கும்.

அக்னி நட்சத்திரம், கத்திரி என்றெல்லாம் சொல்வது வைகாசியில்தான். வைகாசியின் வீரியம் அதில் தெரியும். ஆனாலும் சாஸ்திரம் வைகாசியில் பெருமழை பொழியும் என்கிறது.



சமஸ்கிருத சுலோகமொன்றில், "பூமியில் வெடிப்புகள்; வெடிப்புகளின் ஊடே பள்ளமடை; பெருமழை பொழியும்போது, அதனூடே நீர் ஓடி நதிகளில் தெளிவுடன் பாய்ந்தோடி ஸ்படிகமென திகழும் வைகாசி' என்று நயம்பட கூறப்பட்டிருக்கிறது.

கடும் வெயில் மாதத்தில் அடைமழை என்றால் வசந்தம் தருவதாக இருக்கிறதல்லவா!

வைகாசி என்று சொல்வதையே விகாஸம் என்றும் சொல்வதுண்டு. விகாஸம் என்றால் மலர்ச்சி என்று பொருள். அது பற்றியே வசந்தருதுவாக- இளவேனிலாக வைகாசி பருவகாலம் அழைக்கப்பட்டு வருகிறது.

வைகாசி மாத விசாக நட்சத்திரம் மிகுந்த சீர்மை உடையதாகும். தமிழ்க் கடவுளான முருகப் பெருமான் சூரபத்மனை அடக்கிய நாள் விசாகம்தான்.

புராணங்களில் ஏற்றம் பெற்ற மாதம் வைகாசி. தைத்ரிய ப்ராம்மாணத்திலும் மீமாம்ஸ சாத்திரத்திலும் வைகாசி மாதத்தின் பல்வேறு அம்சங்கள் நுட்பமுடனும் கவிதாநயத்துடனும் சித்தரிக்கப்பட்டுள்ளன.

கால சாஸ்திரத்தை நிர்ணயம் செய்துள்ள பெரியோர்கள் சித்திரை மாதத்தை "மதுமாதம்' என்றும்; வைகாசி மாதத்தை "மாதவ மாதம்' என்றும் நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.





மாதவ மாதம் என்னும் தனிச்சிறப்பு பன்னிரு மாதங்களில் வைகாசிக்கு மாத்திரமே உண்டு.

துளசி பத்ரங்களால் பூஜை செய்து, பலன்கள் நிறைய பெற்று புண்ணியப் பேறு அடைகிற பெரும் தவம் நிறைந்த மாதம் இது.

ஆயுள், செல்வம், மக்கட் செல்வம் அனைத்தும் தரவல்ல பருவகாலம் வைகாசி என்பதை எல்லா நூல்களுமே எடுத்தியம்புகின்றன.

"ப்ருத்வி சந்த்ரோதயம்' என்ற நூலில், "பிரம்மச்சாரியம், பூமியில் உறக்கம், விழிப்பு ஆகிய மூன்றும் தரும் மாதவ மாதம் வைகாசி' என்று விவரிக்கப்பட்டிருக்கிறது.

வைகாசி சுக்ல சதுர்த்தசியின் சிறப்பிற்குக் காரணம், நரசிம்ம அவதாரம்.

வைகாசியின் சிறப்பிற்கு இன்னொன்று கூறுவார்கள். தசாவதாரங்களில் ஒன்றான பரசுராமர் அவதாரம் நிகழ்ந்தது வைகாசி மாத அட்சய த்ரிதியையில்தான் என்று கூறப்படுகிறது.

இந்த மாதத்தில் வரும் விசாக நட்சத்திரம், ஞானச் சிறப்பு பெற்றது. சரவணப் பொய்கையில் முருகப் பெருமான் அவதரித்தது இந்தப் புனித நாளில்தான். இந்தத் திருநாளில் முருகப் பெருமானின் திருத்தலங்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும்.

ராமலிங்க வள்ளலார், வடலூரில் சத்திய ஞான சபை என்னும் அமைப்பைத் துவக்கி வைத்து, தர்ம சாலையில் ஏற்றி வைத்த ஜோதி இன்னமும் ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டுதான் இருக்கிறது.

இந்த நிகழ்ச்சியின் ஆரம்பம் ஒரு வைகாசி மாதத்தில்தான்.

புத்தர் அவதரித்ததும் வைகாசி மாத பௌர்ணமியன்றுதான்.

வைகாசியில் தானம் செய்வது மிகவும் பலனுண்டு. தேவர்களும் அசுரர்களும் இணைந்து பாற்கடலைக் கடைந்தபோது அமுதம் வெளிப்பட்டது வைகாசி மாத ஏகாதசியன்று. இறைவன் அதைக் காத்தது துவாதசியன்று. தேவர்கள் அமுதத்தை உண்டது த்ரயோதசி, பௌர்ணமி தினங்களில்.

எனவே வைகாசி மாதத்தில் வரும் ஏகாதசி, துவாதசி, த்ரயோதசி, பௌர்ணமி தினங்களில் செய்யப்படும் தானத்திற்கு ஒன்றிற்குப் பலவாக பலன் கிட்டும் என்பது ஐதீகம்.



**வைகாசி விசாகப் பெருமை**

வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தன்று ஆறுமுகம் கொண்ட முருகப் பெருமாள் அவதரித்தார்.

வைணவப் பெரியவர் நம்மாழ்வார், ஆழ்வார்திருநகரி என்ற தலத்தில் விசாக நாளில் அவதரித்தார்.

ஆண்டு முழுவதும் சந்தனக் காப்பில் மறைந்திருக்கும் அகோபிலம் நரசிங்கமூர்த்தி, வைகாசி விசாகத்தில்தான் சந்தனக் காப்பைக் களைந்து விக்கிரக உருவத்தில் காட்சி தருவார்.

அதன்பின் அடுத்த வைகாசி விசாகத்தில்தான் நரசிங்க மூர்த்தியை முழுமையாக மீண்டும் தரிசிக்க முடியும்.

## பாலக்கோடு நகரில் நம் இன மக்களுக்கு கொரோனா நிவாரண உதவி



தருமபுரி மாவட்டம், பாலக்கோடு, 24 மனை தெலுங்கு செட்டியார் சமூகம் சார்பாக அருள்மிகு ஸ்ரீ பட்டத்து அரசி அம்மன் கோயில் மற்றும் சமூக நற்பணி குழுவினரால் பாலக்கோடு 24 மனை தெலுங்கு செட்டியார் சமுதாய மக்களின் நலன் கருதி 07-05-2020 அன்று ஸ்ரீ காஞ்சி காமாட்சி அம்மன் அருளால் நம் சமூகத்தை சேர்ந்த மக்களுக்கு கோரோனா நிவாரணமாக ரூ. 1000/- (ரூபாய் ஆயிரம்) மதிப்புள்ள மளிகை பொருட்கள் வழங்கப்பட்டது.





# தடை உத்தரவு காலத்தில் உதவிய குமராபாளையம் சமூகம்.

நாமக்கல் மாவட்டம் குமாரபாளையம் பகுதியில் நமது சமூகத்தினர் பல ஆயிரம் பேர் வசித்துவருகின்றனர். கொரோனா ஊரடங்கு சூழலில் குமாரபாளையம் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமூகத்தின் தேவஸ்தானம் அறக்கட்டளை சார்பாக கடந்த 22-04-2020 முதல் 25-04-2020 ஆகிய நான்கு நாட்கள் மதிய வேளையில் அன்னதானமாக தக்காளி, தயிர், பொதினா, புளி, எலுமிச்சை சாதங்கள் வழங்கப்பட்டன. இந்நிகழ்ச்சியின் துவக்கவிழா நமது சமூகத்திற்கு சொந்தமான மாரியம்மன் கோவில் வளாகத்தில் நடைபெற்றது. தமிழக அரசின் வழிகாட்டுதல்படி சமூக இடைவெளியை கடைபிடித்து அன்னதானம் வழங்குதல் நடைபெற்றது. நமது சமூக மக்களும், பிற சமூக மக்களும் சுமார் எட்டாயிரத்திற்கும் மேற்பட்டோர் பயனடைந்தனர். இதற்கான ஏற்பாடுகளை குமாரபாளையம் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமுதாய தேவஸ்தான அறக்கட்டளையின் தலைவர் 'ஜெட்' ஜெகதீஸ், செயலாளர் சுப்பிரமணியம், பொருளாளர் தண்டபாணி, உப செயலாளர்கள் மாதேஸ்வரன், ரவிச்சந்திரன், உப பொருளாளர் தங்கவேல் மற்றும் நிர்வாக குழு உறுப்பினர்கள் சமுதாய சொந்தங்கள் என அனைவரும் ஒன்றிணைந்து நிகழ்ச்சியை சிறப்பாக நடத்தினார்கள்.

- **அ.சுரேஷ்,** குலமுரசு நிருபர், பள்ளிபாளையம்.



ஜூன் 5

# உலக சுற்றுச்சூழல் தினம்



<மே - 2020>

உலக சுற்றுச் சூழல் தினம் (ஜூன் 5) கொண்டாடப்படுகிறது. 1972இல் ஸ்வீடனின் தலைநகரான ஸ்டாக்ஹோமில் நடைபெற்ற ஐக்கிய நாடுகள் சபையின் உலக மாநாட்டில் உலக சுற்றுச் சூழலின் முக்கியத்துவம், இயற்கை வளங்கள், அதன் நுகர்வு என்பன பற்றி கலந்துரையாடல் நடத்தப்பட்டது. இதன் முடிவில் ஜூன் 5ஆம் தேதியை உலக சுற்றுச் சூழல் (World Environment Day) தினமாக பிரகடனப்படுத்தும் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. இத்தினத்திற்கான செயல்பாட்டுத் திட்டமிடல்களை ஐக்கிய நாடுகள் சூழல் திட்டம் (UNEP) நிர்வகிக்கிறது.

இந்த உலக சுற்றுச் சூழல் தினத்தில் சுற்றுச்சூழல் மாசடைவதை தடுக்க பல நிகழ்வுகள் நிகழ்த்தப்படுகின்றன.

சுற்றுச்சூழல் விழிப்புணர்வின் நோக்கமானது சுற்றுச்சூழல் பாதுகாப்பின் முக்கியத்துவத்தை பொதுமக்களிடம் ஏற்படுத்தி அவர்கள் பங்களிப்புடன், வளமான சுற்றுச்சூழலை எதிர்கால சந்ததியர்களுக்கு விட்டுச் செல்வதாகும்.

*மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்*
*காடும் உடையது அரண்*

தெளிந்த நீரும், பரந்த நிலமும், உயர்ந்த மலையும், அடர்ந்த காடும் இயற்கை அரண்களாகும் என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் வள்ளுவப் பெருந்தகை கூறியுள்ளதன் மூலம்,

பழந்தமிழர்களின் சுற்றுச்சூழல் குறித்த பார்வையினை நாம் அறியலாம். இயற்கைதான் மிகப்பெரிய பள்ளிக்கூடம். தினம் தினம் நமக்கு பாடம் நடத்துகிறது. ஆனால், நாம் சரியாகப் படித்தோமா என்பதுதான் இன்றைய கேள்வி?

## ஐம்பூதங்கள்

ஐம்பூதங்கள் எனப்படும் நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஆகியவை, உலகின் உயிர்கள் நிலைத்தும், நீடித்தும் வாழ்வதற்குத் தேவையான அனைத்தையும் உருவாக்கித் தருகிறது.

19ம் நூற்றாண்டிலும், இதற்குப் பிறகு நடந்த உலகப் போர்கள், தொழிற்புரட்சி,

பொருளாதாரத்திலும் இதன் வளர்ச்சியிலும் ஏற்பட்ட பின்னடைவுகள் போன்ற நிகழ்வுகள், உலக நாடுகளை மிகவும் பாதிப்படையச் செய்தது. இதனால் அவர்கள் அனைவரும் காடுகள், கனிம வளங்கள், நீர், நிலம், காற்று என்று இயற்கை வளங்கள் அனைத்தையும் வரைமுறையின்றி பயன்படுத்தத் தொடங்கினர்.

இதன் பாதிப்புகள் கொஞ்சம் கொஞ்சமாக நம்மை நெருக்கடிக்குள்ளாகி வருகின்றன. தற்போது அமில மழை, நீரின்றி பாலைவனமாதல், உலக வெப்பநிலை மாறுபாடு, ஓசோன் படலம் பாதிப்பு, கதிரியக்கம், பல்லுயிர்களின் அழிவு எனப் பலவும் மனிதர்களுக்குப் பெரும் சோதனையாகிவிட்டன.

இப்பிரச்சனைகளை சரிசெய்ய, ஆய்வுகள் நடத்தி தீர்வு காண ஐ.நா. சபை 1992-ல் சுற்றுச்சூழல் வளர்ச்சி மாநாட்டை நடத்தியது. இம்மாநாட்டில் உலக நாடுகள் அனைத்தும் கலந்து கொண்டன. இதில் சுற்றுச்சூழல் கல்வியை எல்லா நிலைகளிலும் கொண்டுவர வேண்டும் என்று உறுதி எடுக்கப்பட்டது. இதற்கு "அஜெண்டா-21" என்று பெயரிடப்பட்டது. இதன் மூலம் கல்வி, பொது விழிப்புணர்வுப் பயிற்சி போன்றவை சுற்றுச் சூழலை மேம்படுத்த வேண்டிய காரணிகளாகக் கொள்ளவும், சுற்றுச்சூழல் கல்வியை மாணவர்களுக்கு வழங்குவதும் கட்டாயமாக்கப்பட்டது.

### மரங்கள் புவியின் அரண்கள்

மரங்களுக்கும் மனிதர்களுக்கும் இடையிலான உறவு மிகவும் முக்கியமானதாகும். மனிதனின் இருப்புக்கு மரங்கள் அத்தியாவசியம் என்பதைப் பலரும் உணருவதில்லை. மரங்கள் இல்லையெனில் மனிதர்கள் வாழமுடியாது.

இதனாலேயே சுற்றுச் சூழலியலாளர்கள் மரங்கள் வெட்டி வீழ்த்தப்படுவதற்கு எதிராகப் பெரும் இயக்கங்களை முன்னெடுத்து வந்திருக்கிறார்கள். மனிதர்களினால் செய்யப் படக்கூடிய மிகவும் மூர்க்கத்தனமான செயல்களில் ஒன்று மரங்களையும் காடுகளையும் அழித்து அதன் மூலம் பூமியை ஒரு பாலைவனம் ஆக்குவதுதான்.

பாதுகாக்கப்பட்ட சில பகுதிகளையும் எட்டுவதற்கு கடினமான இடங்களையும் விட்டால் இந்த வனப்புமிகு இயற்கையின் பெரும்பகுதி இப்போது அழிக்கப்பட்டுவிட்டது. எஞ்சியுள்ள காடுகளும் மிகவும் மோசமாகச் சீரழிக்கப்பட்டு வருகின்றன. மனித அபிவிருத்திக்கும், அடுத்த சந்ததிக்காகவும் இயற்கை வளங்களைப் பாதுகாத்து வைக்கவேண்டிய பொறுப்பு மனிதனுக்குள்ளது.

### பிளாஸ்டிக் அரக்கன்

பிளாஸ்டிக் பைகள் இன்றைய மனிதன் வாழ்க்கையில் அன்றாடம் பயன்படுத்தும் ஒரு பொருளாகி விட்டது. எந்தப் பொருள் வாங்கினாலும் வணிக நிறுவனங்கள் அதை பிளாஸ்டிக் பைகளில் போட்டுக் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றன. இந்தப் பிளாஸ்டிக் பைகள் பயன்படுத்தப்பட்ட பின்பு குப்பைக்குச் சென்று விடுகின்றன. குப்பைக்குச் சென்ற இந்தப் பைகள் அழிந்து விடுகின்றனவா? என்றால் அதுதான் இல்லை. இது மண்ணில் புதைக்கப்பட்டால் கூட மக்கிப் போவதில்லை. அழியா வரம் பெற்ற இந்தப் பைகளை அழிக்க முயற்சிப்பதை விட தவிர்க்க முயற்சிக்க வேண்டும்





இந்தப் போராட்டங்களில் சில நாடுகள் பிளாஸ்டிக் பைகளை முழுமையாகத் தவிர்த்து விட்டன. பல நாடுகள் பிளாஸ்டிக் பைகளைத் தவிர்க்க வேண்டும் என்று நாட்டு மக்களுக்கு அறிவுறுத்தினாலும், அதன் உற்பத்தியைத் தடுக்கவில்லை. கண்டும் காணாத இந்தப் போக்கினால் பிளாஸ்டிக் பைகளின் பயன்பாடு தொடர்ந்து கொண்டே இருக்கின்றன.

### இந்தப் பிளாஸ்டிக் பைகள் பயன்பாடுகள் பற்றிய சிறு புள்ளி விவரம்.

உலகம் முழுவதும் ஓராண்டுக்கு 50 ஆயிரம் கோடி பிளாஸ்டிக் பைகள் பயன்படுத்தப் படுகின்றன.

ஒவ்வொரு நிமிடத்திற்கும் 10 இலட்சம் பிளாஸ்டிக் பைகள் பயன்படுத்தப்படுகின்றன.

இந்தியாவில் பிற நாடுகளை விட பிளாஸ்டிக் பைகள் அதிக அளவில் பயன்படுத்தப்படுகின்றன. காய்கறி முதல் அனைத்துப் பொருட்களின் விற்பனைக்கும் பிளாஸ்டிக் பைகள் பயன்பாடு ஊடுருவிப் போய்விட்டது.

பிளாஸ்டிக் பைகளை அழிப்பது மிகவும் கடினமானது. இப்பிளாஸ்டிக் பைகள் முழுமையாக அழியக் குறைந்தது 300 ஆண்டுகளாவது ஆகும்

பயன்பாட்டிற்குப் பின்பு குப்பைக்குச் செல்லும் பிளாஸ்டிக் பைகள் அழிக்க முடியாமல் பூமியின் நிலப்பரப்பில் பல இடங்களையும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. ஆறு, குளம், கடல் என நீர்நிலைகளிலும் கூட மிதந்து கொண்டிருக்கின்றன.

பூமியின் நிலப்பரப்பில் கிடக்கும் பிளாஸ்டிக் பைகளைத் தின்று அவைகளைச் செரிமானம் செய்ய முடியாமல் பல கால்நடைகள் அழிந்து கொண்டிருக்கின்றன. பூமியினுள் மேலாகப் புதைந்து கிடக்கும் பிளாஸ்டிக் பைகள் மழைநீரை பூமிக்குள் செல்லவிடாமல் தடுத்துவிடுவதால், நிலத்தடி நீரின் அளவும் குறைந்து கொண்டே இருக்கின்றன. இதனால் வருங்காலத்தில் குடிநீர்ப் பற்றாக்குறை ஏற்படும் அபாயமும் உள்ளது.

ஆறு, குளம், கடல் போன்ற நீர்நிலைகளில் சேரும் பிளாஸ்டிக் பைகளால் குடிநீர் ஆதாரங்களாகத் திகழும் ஆறு, குளங்கள் விசத் தன்மைக்கு மாற்றமடைந்து கொண்டிருக்கின்றன. ஆறு, குளம், கடல் போன்றவற்றில் வாழும் உயிரினங்கள் சிறிது சிறிதாக அழிந்து கொண்டே இருக்கின்றன.

இந்தியாவில் 20 மைக்ரான் கனம், 8க்கு 12 அங்குலத்திற்க்குக் கீழான அளவிலுள்ள பிளாஸ்டிக் பைகளுக்குத் தடையுள்ளது.

### கொரோனா ஊரடங்கினால் மாசு குறைந்தது

கொரோனா காரணமாக பொதுமக்களின் நடமாட்டம் மற்றும் பயணம் குறைந்துள்ளதால், தமிழகத்தின் நகரப்பகுதிகளில் காற்று மாசுபாடு குறைந்துள்ளதோடு, சுற்றுலா தளங்களில் குப்பைகள் சேருவதும் குறைந்துள்ளது தெரிய வந்துள்ளது.

மார்ச் 23ம் தேதி ஊரடங்கு கட்டுப்பாடுகள் அமலுக்கு வந்ததன் காரணமாக, அத்தியாவசிய பொருட்கள், மருத்துவ சேவை மற்றும் அரசு அலுவலர்கள் மட்டுமே பயணிக்க அனுமதிக்கப் பட்டதால், பெரும்பாலான பொதுமக்கள் வீடுகளில் முடங்கினர். விமானம், ரயில், பேருந்து உள்ளிட்ட பொதுப் போக்குவரத்தும், கார், பைக் போன்ற வாகனப் போக்குவரத்தும் குறைந்துவிட்டதாலும், தொழிற்சாலைகள் இயங்காததாலும் நாடு முழுவதும் காற்று, ஒலி, நீர் மாசுபாடுகள் பெருமளவில் குறைந்துள்ளது.





அதேபோல திடக்கழிவு சேர்வதிலும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. சென்னை மாநகராட்சியின் புள்ளி விவரங்களின்படி, ஊரடங்கு அறிவிக்கப்பட்டதில் இருந்து சென்னையில் தினமும் சுமார் 5,000 டன் உருவாகும் குப்பை, 3,800 டன்னாக குறைந்துள்ளது.

காற்று மாசுபாட்டிலும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. வசிப்பிடத்தில் காற்றின் தரக்குறியீடு 50க்குள் பதிவானால், அங்கு காற்று நல்ல தரத்தில் உள்ளதாகவும், 50 முதல் 100 அளவு என்பது நடுத்தரமானது என்றும் 100ல் இருந்து 150க்குள் அல்லது அதற்கு மேல் இருந்தால் ஆரோக்கியமற்றது என்று அளவிடப்படுகிறது.

மத்திய சுற்றுச்சூழல் அமைச் சகத்தின் புள்ளி விவரங்களின்படி, சென்னை நகரத்தில் ஆலைகள் நிறைந்த மணலி பகுதியில், காற்று தர குறியீடு மார்ச் மாதம்7ம் தேதி 96ஆக இருந்தது. ஏப்ரல் 7ம் தேதி அந்த தர குறியீடு 48ஆக குறைந்துவிட்டது.

கங்கை நதியும்கூட முன்பைவிட நன்றாக இருப்பதாக செய்திகள் வருகின்றன.

## மாற்றத்தை நம்மிடமிருந்து தொடங்குவோம்!

சுற்றுசூழல் முக்கியத்துவத்தைப் பொறுத்தமட்டில் ஒவ்வொரு தனிமனிதனின் உள்ளத்திலும் முக்கியத்துவத்தை உணர்த்த வேண்டியதும், அதனை மனிதன் உணர்ந்து செயலை ஆற்ற வேண்டியதும் முக்கியமானதாகும்.

## சுற்றுச்சூழலை பாதுகாக்க நம்மால் முடிந்ததை செய்யலாம்

★ வீடு கட்டும்போது அனைத்து இடத்தையும் கான்க்ரீட் கொண்டு மூடாமல், சிறு தோட்டம் அமைத்து செடிகள் வளர்க்கலாம்! மரம் வளர்க்க முடியாதவர்கள், குறைந்தபட்சம் புற்களை வளர்த்தால்கூட போதும். அது, கார்பன்-டை-ஆக்சைடை இழுத்து, ஆக்சிஜனை வெளியிடும்.

★ வீடுகளில் சேரும் குப்பைகளை மக்கும் குப்பைகள், மக்காத குப்பைகள் என்று தனியாகப் பிரித்துவைக்கலாம்!

★ மறு சுழற்சி செய்வதற்கு ஏதுவான பொருட்களைப் பயன்படுத்த வேண்டும்.

★ கூடுமானவரை சொந்த வாகனங்களைத் தவிர்த்து, பொதுப் போக்குவரத்து வசதிகளைப் பயன்படுத்தலாம். சைக்கிள் உபயோகிப்பது இன்னும் சிறப்பு!

★ கடைகளுக்குச் செல்லும்போது பை எடுத்துச் செல்லலாம். அங்கு சென்று பிளாஸ்டிக்

பைகளை வாங்கி பயன்படுத்துவதைத் தவிர்த்துவிடுங்கள்!



★ கணினியில் பிரின்ட்-அவுட் எடுக்கும்போது ஒரு தாளின் இரண்டு பக்கத்தையும் பயன்படுத் தலாம். இதனால் பேப்பர் பயன்பாடு குறையும்!

★ எப்போதாவது மட்டுமே பயன்படக் கூடிய பொருட்களை நண்பர்களிடம் கடனாகவோ, அல்லது வெளியிடங்களில் வாடகைக்கோ வாங்கிக் கொள்ளலாம்.

★ மறு சுழற்சி செய்வதற்கு தகுதியான மெட்டீரியல்களையோ அல்லது சுற்றுச் சூழலுக்கு மாசு விளைவிக்காதபடி வடிவமைக் கப்பட்ட பொருட்களையோ உபயோகியுங்கள்.

★ பிளாஸ்டிக் பயன்பாட்டை முற்றிலும் தவிர்த்திடுங்கள். அவைகள் சுற்றுச்சூழலுக்கு மட்டுமல்ல உடல்நலத்திற்கும் கேடு விளைவிக்கும் என்பதை உணர்ந்திடுங்கள்.

★ கடைகளுக்குப் போகும் போது வீட்டிலிருந்து துணி பை போன்றவற்றை எடுத்து செல்ல வேண்டும்.

★ வீட்டை விட்டு வெளியே செல்லும் போது மின் விளக்குகள் மற்றும் இதர உபகரணங்களை அணைத்து விட வேண்டும்.

★ தண்ணீரை சிக்கனமாக பயன்படுத்துவோம். நீர் நிலைகளை தூர்வாறுவது, பராமரிப்பு பணிகளை மேற்கொள்வதை அரசுதான் செய்ய வேண்டும் என்று இல்லாமல், விவசாயிகள் குழுவாக இணைந்து செய்யலாம். குறைந்தபட்சம் நீர் நிலைகளுக்கு உள் வளர்ந்து நிற்கும் செடி, கொடிகளை அகற்றுவதன் மூலம் தங்கு தடையற்ற நீரோட்டத்தை ஏற்படுத்த முடியும்.

★ பள்ளி, கல்லூரி, அலுவலகம் ஆகியவற்றில் சிறு குழுக்களை ஏற்படுத்தி சுற்றுச்சூழல் தொடர்பான விழிப்பு உணர்வு நிகழ்ச்சிகளை நடத்தலாம்!

★ சுற்றுப்புற சூழலை பாதுகாப்பது என்பது அரசாங்கத்தின் கடமை, அதில் தனி மனிதனுக்கு பங்கு இல்லை என்று கருத வேண்டாம். நாம் எடுக்கும் ஒவ்வொரு நடவடிக்கையும் சுற்றுச் சூழலை பாதுகாக்கும். அதனால் நம் ஒவ்வொருவருக்கும் இதில் இருக்கும் பொறுப்பை உணர்ந்து செயல்படுவோம்.

இந்த பூமி பல்லாயிரம் ஆண்டுகளாக கணக்கிலடங்கா உயிரினங்களை எந்த பேதமும் இன்றி வாழவைத்திருக்கிறது. நம்முடைய முன்னோர்கள் நமக்கு பூமியை முழுமையாகக் கொடுத்துச் சென்றுள்ளார்கள். அதே மனநிலையுடன் நாமும் நம்முடைய நாளைய தலைமுறைக்கு நல்ல காற்று. சுத்தமான நீர், ஆரோக்கியமான வாழ்க்கையைத் திருப்பித் தரவேண்டிய கடமை இருக்கிறது. அதை மறந்தால் இயற்கை மட்டுமல்ல, நம் தலைமுறையும் நம்மை மன்னிக்காது.

# திருப்பூர் 24 மனை தெலுங்கு செட்டியார் (அனைத்து அமைப்பு) தன்னார்வலர்கள் கூட்டமைப்பு வழங்கிய கொரோனா நிவாரண உதவி

"காலத்தினார் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப் பெரிது." எனும் திருவள்ளுவர் வாக்கின்படி, என்றும் "மக்கள் நிவாரணப் பணியில்" முன்னின்று செயல்படும் திருப்பூர் நம் இன மக்கள், இந்தக் கொரோனா காலகட்டத்தில், நம்மினத்தில் "உதவி தேவைப்படும்" சுமார் 469 குடும்பத்திற்கான சிறு உதவியாக ரூ.600/- மதிப்புள்ள மளிகை பொருட்களை 14.05.2020 வரை திருப்பூர் 24 மனை தெலுங்கு செட்டியார் (அனைத்து அமைப்புகள் சார்ந்த) "தன்னார் வலர்கள் கூட்டமைப்பு" சார்பில் வழங்கப்பட்டது. இதற்கு நன்கொடை வழங்கிய "நண்கொடையாளர்கள்" மற்றும் "பாடுபட்ட நம்மின தன்னார்வலர்கள் - (கோரோனா கால கட்டத்தில் வெளியே வரக்கூடாது என்ற சூழலில் / நம்மினதிற்கு உதவிட) அனைவரின் ஈடுபட்டால் சிறப்பாக "நல் எண்ணம்" நிறைவேறியது.

நன்கொடையாளர்கள் மற்றும் தன்னார்வலர்கள் என்றும் பாராட்டுதலுக்குரியவர்கள். இதன் பொருட்டு ஒத்துழைத்த அனைவருக்கும் நன்றி!. இன்று போல என்றும் தன்னார்வலர்கள் "நல் எண்ணம்" போற்றுவோம்! நல்லவை என்றும் இணைந்து செய்வோம்! நன்றி! நன்றி! நன்றி!

தகவல்: **கிருஷ்ணகுமார்,**
குலமுரசு நிருபர், திருப்பூர்.





24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கத்தின்
அதிகாரப்பூர்வமான பத்திரிகை

# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

24 மனை இன மக்களின் இணைப்புப் பாலம்











- காமாட்சியம்மன் கோவில் விழா செய்திகள்
- குலதெய்வக் கோவில் விழா செய்திகள்
- திருமண பரிவர்த்தனைக்கான மணக்கோலம் பகுதி

மற்றும் ஏராளமான செய்திகளுடன்...

ஆண்டு சந்தா
ரூ. 200/-

சிறப்பாசிரியர்: கரூர் K.C.பழனிசாமி Ex.MP.

ஆசிரியர்: உடுமலை Dr.துரைஅங்குசாமி Ph.D.,

சந்தா செலுத்தவும், மணக்கோலம் பதிவிற்கும்
தொடர்பு கொள்ளவேண்டிய செல்பேசி எண்:
99 65 900 990



செய்திகள், படைப்புகள், விளம்பரங்கள் அனுப்ப : 24manaiKulamurasu@gmail.com

புதிய சந்தா, புதுப்பித்தல், முகவரி மாற்றம் செய்ய : kulamurasuoffice@gmail.com

மணக்கோலம் பதிவு செய்ய, திருத்தம் செய்ய : manakolam24@gmail.com

Gujan's PARIPALANA RETIREMENT COMMUNITY

GUJAN'S

# PARIPALANA - PHASE II

**Retirement Community**

Sri Veeramathi Amman

## Comfortable Homes for Retired living Near Vadavalli.

**First Phase of 92 Units already functioning smoothly Since July 2017.**
**Second Phase of 1, 2, 3 BHK Flats under Construction near**
**Bharathiya Vidhya Bhavan School , Ajanoor Road, Vadavalli, Coimbatore.**





## * Bring back the Memories of Time gone by...

**Common Vegetarian Dining, Cultural & Religious Activities including Regular Music Concerts , Comprehensive Medical Care, Indoor Game Activities, Mini Gym for Seniors, Guest Rooms & Library.**

*** SERVICE PROVIDER- PARIPALANA CAFE**

For Booking Call :

87540 44116
87540 44881
81100 42393



**No : 4, Gandhi Layout,**
**Maruthamalai Main Road,**
**Coimbatore - 46.**



svaconstructions@yahoo.co.in
srigujanbuilder@gmail.com



www.gujanparipalanaseniorliving.com

TN/11/BUILDING/0045/2019
Dated on 29.03.2019





# ராஜபாளையத்தில் கொரோனா நிவாரண உதவி

கொரோனா பாதிப்பினால் வேலை இழந்த ஏழை எளியோருக்கு VHPயுடன் ராஜபாளையம் பொதினி அறக்கட்டளையும் இணைந்து கடந்த 10-4-2020 முதல் இரவு உணவினை 3-5-2020 வரை வழங்க முடிவுசெய்து வழங்கப்பட்டது. ஊரடங்கு 17-05-2020 வரை நீட்டிக்கப்பட்டதால் அதுவரையும் ஏழைகளுக்கு உணவு வழங்க முடிவுசெய்து தொடர்ந்து வழங்கப்படுகிறது. ராஜபாளையம் நகரின் பலபகுதிகளுக்கும் அந்தந்த பகுதி தொண்டர்கள் மூலமாக விநியோகம் செய்யப்பட்டது.






## 24 மனையாரின் மருத்துவ உதவிக்கு கோவை 24 மனை மருத்துவர்களின் உதவி மொபைல் எண்ணைத் தொடர்பு கொள்க









## உதவி எண் : 98431 50024

**செயல்படும் நேரம் : காலை 9 மணி முதல் மாலை 8 மணி வரை**

1. SMS அல்லது வாட்ஸ்அப் மெசேஜ் கொடுக்கவும். 24 மணி நேரத்தில் பதில் கொடுக்கப்படும்.
2. தயவு செய்து போன் செய்து பேசுவதைத் தவிர்க்கவும். மிகவும் அவசரமான நேரத்தில் மட்டும் போன் செய்து பேசவும்.
3. கோவையிலுள்ள பல்வேறு மருத்துவமனைகளிலுள்ள மருத்துவர்கள் அவர்களுடைய சிறப்புப் பிரிவுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.
4. தயவு செய்து மருத்துவர்களது வேலைக்குத் தொந்தரவு கொடுக்காமல் அவர்களை அணுகி வேண்டிய ஆலோசனை/உதவியைப் பெறவும்.

# கொரோனா வைரஸ் தடுப்பு மருந்து கண்டுபிடிக்கும் ஆய்வில் நம் இன விஞ்ஞானி



## டாக்டர் கே. ஆனந்த்குமார் (16 வீடு)



உலகம் முழுவதும் கொரோனா தொற்றுப் பரவல் அதிகரித்துள்ள நிலையில், வைரஸ் தடுப்பு மருந்துகளைக் கண்டறியும் ஆராய்ச்சியில் பல்வேறு நாட்டு ஆய்வாளர்கள் தீவிரமாக ஈடுபட்டு வருகின்றனர். நமது நாட்டிலும் இது தொடர்பான ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. அதில் குறிப்பிடத்தக்க நிறுவனமாக உள்ளது ஹைதராபாத்தைச் சேர்ந்த இந்தியன் இம்யூனோலாஜிக்கல்ஸ் லிமிடெட் (Indian Immunologicals Limited) நிறுவனம். இந்நிறுவனம் உலகின் முன்னணி மருந்து ஆராய்ச்சி நிறுவனங்களில் ஒன்றாகும். சுருக்கமாக ஐஐஎல் (IIL) என்று குறிப்பிடப்படுகிறது. இந்நிறுவனத்தின் நிர்வாக இயக்குநராக இருப்பவர் நம் 24 மனை இனம் 16 வீட்டைச் சேர்ந்த டாக்டர் கே. ஆனந்த்குமார் அவர்கள்.

டாக்டர் கே.ஆனந்த்குமார் அவர்கள் இந்திய மருத்துவ ஆராய்ச்சி கவுன்சிலிலிருந்து (ஐ.சி.எம்.ஆர்) நுண்ணுயிரியலில் பி.எச்.டி பட்டம் பெற்றவர் மற்றும் உயிரி தொழில்நுட்பம் / மருந்தியல் துறையில் 25 ஆண்டுகளுக்கும் மேலாக அனுபவம் பெற்றவர்.

தேசிய பால்வள மேம்பாட்டு வாரியத்தின் (என்.டி.டி.பி) துணை நிறுவனமான இந்தியன் இம்யூனோலாஜிகல்ஸ் லிமிடெட் இந்தியாவின் மிகப்பெரிய கால்நடை தடுப்பூசி நிறுவனமாகவும், இந்தியாவில் 3 வது பெரிய மனித தடுப்பூசி நிறுவனமாகவும் உள்ளது. ஐ.ஐ.எல் குழுவில் முழுநேர இயக்குநராக உள்ள இவர், அதன் துணை நிறுவனமான பிரிஸ்டைன் பயோலாஜிக்கல்ஸ் என்ஜெட் லிமிடெட் நிறுவனத்திலும் இயக்குநராக உள்ளார்.

ஐ.ஐ.எல் க்கு முன்பு, வோக்ஹார்ட் லிமிடெட் நிறுவனத்தில் துணை துணைத் தலைவராக - பயோடெக் நடவடிக்கைகளில் இவர் பணியாற்றினார்.

ஆஸ்திரேலியாவில் ஃபைசர் (Pfizer ) நிறுவனத்திலும், நியூசிலாந்தில் Schering Plough Animal Health நிறுவனத்திலும் பத்தாண்டுகள் பணியாற்றியுள்ளார். அவர் நியூசிலாந்து அரசாங்கத்தின் பயோடெக் முதலீட்டு மேலாளராகவும் இருந்துள்ளார்.

டாக்டர் ஆனந்த்குமார் FICCI மற்றும் CII உடன் தேசிய பயோடெக்னாலஜி நிபுணர் குழுவில் உறுப்பினராக உள்ளார், மேலும் அவர் CII உடன் தேசிய மருந்துக் குழுவின் உறுப்பினராக உள்ளார். ஆஸ்திரேலியாவின் பெற்றோர் மருந்து சங்கத்தின்

(பி.டி.ஏ) நிர்வாகக் குழு உறுப்பினராக இருந்த அவர் தற்போது இந்திய மருந்தக (ஐபி) உடன் தடுப்பூசிகள் தொடர்பான பகுப்பாய்வு முறைகள் குறித்த நிபுணர் குழுவில் உள்ளார்.

அவர் 2010-15 காலகட்டத்தில் யுனைடெட் ஸ்டேட்ஸ் பார்மகோபியா (யுஎஸ்பி) உடன் நிபுணர் தன்னார்வலராக பணியாற்றினார். பல்வேறு சர்வதேச மன்றங்களில் துறை சார்ந்த வல்லுநராக (Expert) இருந்துள்ளார்.

அகமதாபாத்தில் உள்ள இந்திய மேலாண்மை நிறுவனத்தில் மூத்த மேலாண்மை மேம்பாட்டு திட்டத்தை டாக்டர் ஆனந்த்குமார் மேற்கொண்டார்.

திட்ட மேலாண்மை, பயோபிரசஸ் உற்பத்தி, மேம்பட்ட நிரப்பு செயல்முறைகள், தொழில்நுட்ப பரிமாற்றம், தரக் கட்டுப்பாடு, தர உறுதி, R&D, Cold Chain Management, TQM, தொழில்துறை பாதுகாப்பு, உயிர் பாதுகாப்பு உள்ளிட்ட பயோடெக் / தடுப்பூசி தொழில் தொடர்பான பல்வேறு துறைகளில் அவருக்கு பரந்த அனுபவம் உண்டு.

ஹெபடைடிஸ் பி தடுப்பூசி (Hepatitis B Vaccine), Recombinant Human Insulin, எரித்ரோபொய்டின் (Erythropoietin), இன்சுலின் கிளார்கின் (Insulin Glargine), இன்டர்ஃபெரான் (Interferon), எபிடெர்மல் வளர்ச்சி காரணி (Epidermal Growth Factor) உள்ளிட்ட பல்வேறு மறுசீரமைப்பு உயிரி தொழில்நுட்பத் தயாரிப்புகளின் வணிகமயமாக்கலுக்கு அவர் தீவிரமாக பங்களித்துள்ளார்.

ஈஸ்ட், பாக்டீரியா மற்றும் பாலூட்டிகளின் செல்கள் போன்ற மூன்று முக்கிய வெளிப்பாடு அமைப்புகளுக்கும் சொந்தமான தயாரிப்புகளை அவர் கையாண்டுள்ளார்.






2013ஆம் ஆண்டில் சிங்கப்பூரைச் சேர்ந்த முன்னணி ஆலோசனை நிறுவனமான டெர்ராபின் வெளியிட்ட இந்திய உயிர் மருந்து துறையில் செல்வாக்குமிக்க முதல் 40 நபர்களில் ஒருவராக கே.ஆனந்த்குமார் அவர்கள் தேர்வு செய்யப்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

டாக்டர் ஆனந்த்குமார் அவர்களிடம் கொரோனா தடுப்பு மருந்து ஆராய்ச்சி குறித்து கேட்டபோது, அவர் கூறியதாவது,

எங்களது ஐஐஎல் ஆய்வு நிறுவனம் ஆஸ்திரேலியாவின் கிரிஃபித் பல்கலையுடன் (Griffith University) இணைந்து கோவிட் 19 எனப்படும் கொரோனா தொற்றுக்கு தடுப்பு மருந்து (Vaccine) கண்டுபிடிக்க ஆராய்ச்சிகளை மேற்கொண்டுள்ளது. இது மிகவும் புதிய நோய்த்தொற்று, உலகம் முழுதும் பரவியுள்ள தொற்று. எனவே மருந்து கண்டுபிடிக்க உலகின் பல பகுதிகளில் ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்ட போதிலும், மருந்து கண்டுபிடிக்க குறைந்தபட்சம் 18 மாதங்கள் ஆகும் என்றார். ஏற்கனவே விலங்குகள், மனிதர்களுக்கு ஏற்படும் தொற்றுகளுக்கு மருந்துகள் கண்டுபிடித்துள்ளோம். ஜிகா மற்றும் கோவிட் 19 வைரஸ் தொற்றுக்கும் தடுப்பு மருந்துகளை ஆய்வு செய்து வருகிறோம். இம்முயற்சியில் நிச்சயம் வெற்றி பெறுவோம் என்று கூறினார்.

**(இவரது முழுமையான நேர்காணல் அடுத்த இதழில் வெளியாகும் - ஆசிரியர்)**

# மகாப்பெரியவரின் மகத்தான கருணை

காஞ்சி மகாப்பெரியவரை தங்கள் குருவாக ஏற்றவர்கள் எத்தனையோ பேர் உண்டு. வாழும் தெய்வமான அவரை, இன்றும் கூட பலரும் மானசீக குருவாக ஏற்று வருகின்றனர். ஆனால், அந்த குரு, தனக்கு குரு என்று யாரைச் சொன்னார் தெரியுமா? தெரிந்தால், மிகவும் ஆச்சரியப்படுவீர்கள்.

மகாபெரியவரிடம் அளவற்ற பக்தி கொண்ட ஒரு பணக்கார பக்தர், அடிக்கடி காஞ்சி மடம் வந்து பெரியவரைத் தரிசித்து செல்வார்.

ஒருமுறை, அவர் தனது குடும்பத்தாருடன், தான் வாங்கிய புதிய காரில் மடத்திற்கு வந்தார். அவர் அருகிலுள்ள கலவை கிராமத்திற்கு சென்றுள்ளார் என்பதை அறிந்து, அங்கு சென்றார். பெரியவரைத் தரிசித்த அவர், சாவியை பெரியவரிடம் கொடுத்து, "சுவாமி! தங்கள் தொட்டு ஆசிர்வதிக்க வேண்டும்,'' என்றார்.

பெரியவர் அவரிடம், கலவையில் ஒரு குறிப்பிட்ட இடத்தின் பெயரைச் சொல்லி, ""நீ அங்கு செல். அங்குள்ள மரத்தின் அடியில், ஒரு பெரியவர் தாடி மீசையுடன் படுத்திருப்பார். அவரை உன் புதுக்காரில் அழைத்து வா,'' என்று உத்தரவிட்டார்.

பெரியவர் சொன்னபடியே, அவரும் அங்கு சென்று அந்த முதியவரை அழைத்து வந்தார். இருவரும் பெரியவர் முன்னால் அடக்கமாக நின்றனர்.

பெரியவர் பணக்காரரிடம், "இவரை யாரென்று உனக்குத் தெரியாது. ஏன் அழைத்து வரச்சொன்னேன் என்றும் தெரியாதல்லவா! இவர் தான் எனக்கு குரு. நான் துறவுப்பட்டம் ஏற்பதற்காக காஞ்சிபுரத்தில் இருந்து கலவைக்கு வந்தேன். அங்கிருந்து என்னை "ஜட்கா'வில் (குதிரை வண்டி) அழைத்து வந்தவர் இவர் தான். வரும் வழியில் ஸ்ரீமடம் குறித்தும், அங்குள்ள நடைமுறைகள் குறித்தும், தனக்குத் தெரிந்த மொழியில் (இயல்பான பேச்சு) எனக்குச் சொல்லிக்கொண்டே வந்தவர். அவர் மூலம் பல விஷயங்களை நான் அறிந்து கொண்டேன், அது மட்டுமல்ல, மிகவும் ராசியானவரும் கூட. அவர் கையில் சாவியைக் கொடுத்து வாங்கிக்கொள், நலமாய் இருப்பாய்,'' என்றார்.

ஆச்சரியப்பட்ட பணக்காரர், அந்த முதியவரிடம் சாவியைக் கொடுத்து வாங்கிக் கொண்டார். ஜாதி மதம் பாராமல், தனக்காக ஜட்கா ஓட்டி வரும் போது, இயல்பான தகவல்களைச் சொன்னவரை தனது குருவாக ஏற்ற மகாபெரியவரின் பரந்த மனப்பான்மையை புகழ்வதற்கு வார்த்தைகள் ஏது! அந்த தெய்வத்தை நம் மானசீக குருவாக ஏற்று, அவரது நல்லாசியுடன் உயர்ந்த நிலையை அடைவோம்.

கருணை மழை தொடரும்...



தொகுப்பு: **டாக்டர் துரைஅங்குசாமி**

உ
ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை






24 மனை தெலுங்கு செட்டியார்கள்
தெலுங்குபட்டி செட்டி, சாது செட்டி
சமுதாய பெருமக்கள் அனைவரும்,
எல்லா வளமும், நலமும் பெற்று
நிறை செல்வங்களுடன்,
நீண்ட ஆயுளுடனும் வாழ்வாங்கு வாழ
உலகளந்த மகாவிஷ்ணு,
அன்னை காமாட்சி தாயை
வேண்டி வணங்குகிறேன்.





*என்றும் உங்கள் பாசத்துடன்:*

தலைமை
சங்கத் தலைவர்

# ரெ. நடராஜன்

**24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்**

155, ஈ.வே.ரா.பெரியார் நெடுஞ்சாலை,
கீழ்பாக்கம், சென்னை - 600 010.

- ★ வாழைக்காய், வாழைப்பூ, வாழைத்தண்டு இவைகளை சமைக்கும்போது இரண்டு தேக்கரண்டி தேங்காய் எண்ணெய் விட்டு தாளித்தால், மிகுந்த மணத்துடன் இருக்கும்.
- ★ சர்க்கரை பொங்கலின் சுவை மேலும் பிரமாதமாக இருக்க கொஞ்சம் மில்க்மெய்ட் சேர்த்தால் அற்புதமான சுவையை சுவைக்கலாம்.
- ★ பாயாசத்திற்கு திராட்சைக்கு பதிலாக பேரிச்சம் பழத்தை பொடியாக நறுக்கி வைத்து நெய்யில் பொரித்து போட்டால் சுவையாக இருக்கும்.
- ★ வெங்காய பக்கோடா செய்ய மாவு பிசையும் போது வறுத்த நிலக்கடலையை பொடி செய்து மாவுடன் சேர்த்து பிசையவும். இதனால் பக்கோடா மொறு மொறுவென்று ருசியாக இருக்கும்.
- ★ சப்பாத்தி செய்து எண்ணெய் வடிகட்டியில் போட்டு மூடி வைத்தால் அடியில் உள்ள சப்பாத்தி வேர்த்து ஈரமாகாமல் இருக்கும்.
- ★ சக்கரைப் பொங்கல் செய்யும்போது அரை கப் தேங்காய் பால் ஊற்றிக் கிளறி இறக்கினால், பொங்கல் மிகவும் சுவையாக இருக்கும்.
- ★ தேங்காய்த் துருவல் மீதியானால், அதை லேசாக வதக்கி சிறிது உப்பு சேர்த்து வைத்தால் மறுநாள் சமையலுக்குப் பயன் படுத்திக் கொள்ளலாம்.
- ★ பவுடர் மற்றும் ரசம் பவுடர் எப்போதும் புதியதாக மணம் மாறாமல் இருக்கவேண்டுமா? சாம்பார் பவுடர் மற்றும் ரசம் பவுடர் பாக்கெட்டுகளை பிரிஜ்ஜின் பிரீஸரில் வைத்து உபயோகிங்கள். மணம் மாறாமல் இருக்கும்.
- ★ வெங்காய சட்னி கசக்காமல் இருக்க வேண்டுமா? வெங்காயத்தை சிறிது எண்ணெய் விட்டு வதக்கியபின் அரையுங்கள். சட்னி கசக்காமல் ருசிக்கும்.
- ★ கேரட்டின் தலைபகுதியை சிறிது நறுக்கி விட்டு காற்று புகாத பாலிதின் பைகளில் போட்டுவைங்கள். நீண்ட நாட்களுக்கு கேரட் பசுமையாக உலராமல் இருக்கும்.
- ★ பச்சை மிளகாயின் காம்பினைக் கிள்ளிவிட்டு காற்று புகாத பாலிதின் பைகளில் போட்டு வைத்தால் நீண்ட நாட்களுக்கு பசுமை மாறாமல் இருக்கும்.




# நளபாகம்

- ★ பசலைக்கீரை மற்றும் பச்சை காய்கறி, கீரைவகைகளைச் சமைக்கும் போது சிறிது சர்க்கரை சேர்த்து சமையுங்கள். சமைத்த பின்னும் அவற்றின் பச்சை நிறம் மாறாமல் இருக்கும்.
- ★ பிரெட் பக்கோடா செய்வதற்கு முன் வெட்டி வைத்திருக்கும் பிரெட் ஸ்லைஸ்களை பாலில் முக்கி எடுத்த பிறகு பக்கோடா மாவில் போடுங்கள். அட்டகாசமான சுவை கிடைக்கும்.
- ★ கோதுமை மாவில் வண்டு பிடிக்காமல் இருப்பதற்காக சிறிதளவு உப்பை கலந்து வைத்தால் வண்டு பிடிக்காது.
- ★ காப்பர் பாட்டம் பாத்திரம் மங்காமல் இருப்பதற்காக சிறிது உப்பையும், வினிகரையும் பாத்திரத்தின் மேல் பூசி துணியால் அழுத்தி தேய்த்தால் பாத்திரம் பளிச்சின்னு இருக்கும்.
- ★ மிக்ஸி ஜாடியில் உள்ள பிளேடை கழற்ற இயலாமல் இருந்தால், அதை கழற்றுவதற்கு ஜாடியில் பிளேடு மூழ்கும் வரை வெண்ணீர் ஊற்றி சிறிது நேரம் வரை வைக்கவும். பின்பு நீரை கிழே ஊற்றி விட்டு பிளேடை கழற்றினால் எளிதில் கழற்றலாம்.
- ★ இட்லி சாம்பாரில் கடைசியாக மிளகு, சீரகம், காய்ந்த மிளகாய், கொத்தமல்லி போன்றவற்றை ஒரு பாத்திரத்தில் போட்டு வறுத்து விட்டு மிக்ஸியில் அரைத்து சாம்பாரில் போட்டால் கூடுதல் சுவையாக இருக்கும்.

அருள்மிகு வீரமாத்தி அங்காள பரமேஸ்வரி துணை!



# வேல்முருகன்

## மெட்டல் மார்ட் & பர்னிச்சர் ஷோரூம்




24 ஆண்டுகால... வடக்குவாசல் பாத்திரக் கடை














**9976765838**

10-1, வெங்கட கிருஷ்ணா ரோடு,
லதாங்கி தியேட்டர் பின்புறம்

பசுபதி ரோடு கார்னர்
உடுமலைப்பேட்டை - 642 126



# மணக்கோலம்

## கட்டணமில்லாத இலவச சேவை

1. 24 மனை குலமுரசின் மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. வரன் வேண்டுவோர் பயன்பாட்டிற்கான இலவசச் சேவை இது. வணிக நோக்குடையவர்கள் - இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தக் கூடாது.
2. மணக்கோலம் பகுதிக்கு விண்ணப்பிப்பவர்கள் குலமுரசு சந்தா தாரர்களாக வேண்டும்.
3. வரன் தகவல்கள் 3 மாத இதழ்களில் மட்டுமே வெளியிடப்படும். ஏராளமானவர்கள் விண்ணப்பம் செய்வதால் தொடர்ந்து வெளியிட இயலவில்லை. 3 மாதங்களுக்குப் பிறகு மீண்டும் விண்ணப்பம் தந்தால் மறுபடியும் 3 மாதங்களுக்கு வெளியிடப்படும்.
4. வரன்களுக்கு திருமணம் நிச்சயமாகிவிட்டால் உடனடியாகத் தெரிவிக்க வேண்டும்.
5. மணக்கோல விண்ணப்ப மாதிரிப் படிவம்

1. பெயர் ....................................................
2. படிப்பு ....................................................
3. பணி .................. 4.வருமானம் ...........
5. வீடு 8 / 16 6. குலம் ..................
7. பிறந்தநாள் .......................................
8. ராசி. .................... 9.நட்சத்திரம்.........
10. பெற்றோர் பெயர் ............................
11. ஊர் ..... ...........................................
12. தொலைபேசி எண்: ........................

மேற்கண்ட அனைத்துத் தகவல்களுடன் குலமுரசுக்கு சந்தா செலுத்தியதற்கான DD அல்லது செலானையும் ஸ்கேன் செய்து

**manakolam24@gmail.com**

என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

# 24 மனை குலமுரசு

## ஆண்டு சந்தா ரூ. 200/- மட்டுமே

## சந்தா செலுத்துவது எப்படி?

| | |
|---|---|
| Account Name | : 24 MANAI KULAMURASU |
| Bank Name | : CANARA BANK |
| Branch | : CHENNAI KILPAK |
| Account Number | : SB. A/c. 1650101014869 |
| IFSC CODE | : CNRB0001650 |

மேற்கண்ட வங்கிக் கணக்கில் ஆன்லைன் மூலம் ரூ.200/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ **9965 900 990** என்ற வாட்ஸ்அப் (அ) kulamurasuoffice@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும்.

கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.200 + வங்கி சேவைக் கட்டணம்+ GSTவரி ரூ.60 சேர்த்து ரூ.260/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் (அ) வாட்ஸ்அப் (அ) தபாலில் அனுப்பவும்.

24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.
**Customer Care Cell: 9965 900 990**

- பிரதி மாதம் 1-ஆம் தேதி வரை வரும் கடிதங்களுக்கு அந்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பிவைக்கப்படும்.
- பிரதி மாதம் 2-ஆம் தேதிக்கு மேல் வரும் கடிதங்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பி வைக்கப்படும்.
- குலமுரசு சந்தா பெறப்பட்டவுடன் உங்களுக்கென்று ஒரு ID எண் உங்கள் செல்போனுக்கு SMS மூலம் தெரிவிக்கப்படும்.

## குலமுரசு வரவில்லையா?

உங்கள் ID எண் குறிப்பிட்டு **9965 900 990** என்ற தொலைபேசி எண்ணுக்கு தகவல் தெரிவிக்கவும். அல்லது kulamurasuoffice@gmail.com - என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பவும்.



# மணக்கோலம்

புதிய சந்தா, புதுப்பித்தல், முகவரி மாற்றம் மற்றும் மணக்கோலம் பகுதியில் சேர்க்க மற்றும் திருத்தம் செய்ய தொடர்பு கொள்ளவேண்டிய செல்பேசி எண்: **99 65 900 990**

## மணக்கோலம் வாசகர்கள் கவனத்திற்கு

- மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. நம் இனமக்கள் வரன் தகவல்களைப் பகிர்ந்து கொள்ள உதவும் இலவச சேவைப் பகுதி. இது விளம்பரம் அல்ல. இதற்கு தனியாகக் கட்டணம் கிடையாது.
- மணக்கோலம் பகுதியில் வரன் விபரம் வெளியிட 24 மனை குலமுரசு இதழுக்கு ஆண்டு சந்தாதாரராக இருக்கவேண்டும் என்பது மட்டுமே விதிமுறை.
- இப்பகுதியில் வரன் பற்றிய தகவல்கள் மூன்று மாத இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்படும். மூன்று மாதங்களில் வரன் அமையாதவர்கள் மீண்டும் மூன்று மாதங்கள் மறுபிரசுரம் செய்து கொள்ளலாம். இம்முறையில் ஆண்டு சந்தா நிறைவடையும் காலம் வரை ஒருவர் நான்கு முறை மறுபிரசுரம் செய்து கொள்ளலாம்.
- மணக்கோலம் பகுதியில் மறுபிரசும் செய்ய, விபரம் சேர்க்க, சந்தா விபரம் அறிய 99 65 900 990 என்ற செல்பேசி எண்ணிற்கு தொடர்பு கொள்ளவும் அல்லது manakolam24@gmail.com என்ற மின்னஞ்சலில் தெரிவிக்கவும்.
- வரன்களுக்குத் திருமணம் உறுதிசெய்யப்பட்டால் சேவை மைய எண்ணில் தொடர்பு கொண்டு வரன் தகவலை நீக்கிக் கொள்ளலாம்.
- மணக்கோலம் மூலமாக வரன் அமைந்தவர்கள் திருமணப் படத்தை குலமுரசில் வெளியிட விபரங்களுடன் அனுப்பிவைத்தால், வெளியிடப்படும்
- ஒவ்வொரு மாதமும் 5ம் தேதிக்கு முன்பு வரும் வரன் தகவல்கள் மட்டுமே அம்மாத இதழில் இடம்பெறும். அதற்குப்பின் வருபவை அதற்கடுத்த இதழில் இடம்பெறும்.
- இப்பகுதியில் வெளியாகும் வரன் விபரங்களுக்கு வெளியிடும் குடும்பத்தாரே முழுப் பொறுப்பு. மணமகன் அல்லது மணமகள் குறித்த விபரங்களை சம்பந்தப்பட்ட குடும்பத்தாரே தொடர்பு கொண்டு விசாரித்து தங்களுடைய சொந்தப் பொறுப்பில் திருமணங்களை உறுதி செய்துகொள்ளவும்.
- வணிக நோக்கமுடையவர்கள் – இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தி பணம் வசூலிப்பதோ – நகல் எடுத்து விற்பனை செய்வதோ – வேறு வழிகளில் பயன்படுத்துவதோ கூடாது.
- 24 மனை குலமுரசு இதழுக்கு தபால், மின்னஞ்சல் மற்றும் வாட்ஸ்அப் மூலமாக வரும் வரன் விபரங்களை நாங்கள் எவருடனும் பகிர்ந்து கொள்வதில்லை. வேறு தளங்களிலும் நாங்கள் வெளியிடுவதில்லை.

**மணக்கோலம் பக்கங்களில் இடம்பெறும்
தனிநபர் தகவல்கள் (Privacy Reasons)
பொதுவெளியில் பகிர்வதைத் தவிர்க்க
இந்த PDF மின்இதழில் மணக்கோலம்
பகுதி சேர்க்கப்படவில்லை.
மணக்கோலம் பகுதியுடன் இணைந்த
24 மனை குலமுரசு மின்இதழைப்
படிப்பதற்கான இணைய முகவரி (Weblink)
குறுஞ்செய்தியாக (SMS) சந்தாதாரர்களின்
பதிவு செய்யப்பட்ட கைபேசி எண்ணிற்கு
தனியே அனுப்பிவைக்கப்பட்டுள்ளது.
இணைய இணைப்புள்ள கைபேசி மற்றும்
கணினிகள் வழியாக மட்டுமே இந்த இதழைப்
படிக்கமுடியும். பதிவிறக்கம் செய்ய முடியாது
என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.**



# வாசகர் குரல்

வாசகர்களின் விமர்சனங்கள் வரவேற்கப்படுகின்றன. வாசகர்கள் எழுதும் நிறை, குறை அனைத்தும் ஒளிவுமறைவின்றி வெளியிடப்படும்.

அன்புள்ள அங்கு,

உங்கள் பேச்சின், எழுத்தின், கவிதையின் ரசிகன் நான். ஏதேதோ படிக்க நேரம் ஒதுக்கும் நான், "குலமுரசு" படிக்க நேரம் ஒதுக்காது இருப்பேனா? முதலில் உங்களை வாழ்த்தி வத்தலக்குண்டுத் தமிழாசிரியர் எழுதியதைப் படித்து அகமகிழ்ந்தேன். உங்கள் தலையங்கம், வைரமுத்து கவிதை, சுகிசிவத்தின் காலத்தின் அருமை பற்றிய கட்டுரை முதலியன படித்தேன். மற்றவற்றைப் புரட்டிப் பார்த்தேன். Cursory glance. வண்ணத்தாள்களில், பிழையற்ற அச்சுப்பதிவு கண்களையும், மனதையும் கவர்ந்தது. வாழ்த்துகள் அங்கு.

**- பேராசிரியர் கு.சிந்தாமணி,**
முன்னாள் கல்லூரி முதல்வர், உடுமலை.

ஆசிரியர் அய்யா அவர்களுக்கும், குழுவுக்கும் இந்த இன்னல் மிக்க காலத்திலும், இதழை வெளியிட்டமைக்கு மிக்க நன்றி!

1. கோவிட் 19 குறித்த 6 பக்கங்களும் மிகவும் உபயோகமாக உள்ளது. தற்காப்பு, மனம் தளராமை, உணவு முறைகள், உறவுகள் பேணுதல் அனைத்தும் விளக்கப்பட்டுள்ளது.

2. அத்திபழத்தின் மகிமை அமோகம்.

3. சுகிசிவத்தின் சொற்பொழிவு சுருக்கம் சுவையூட்டும் அமுது.

- திருச்சி **K.செல்வகுமார்,** B.E.,

இந்த மாத குல முரசு இதழை மின் இதழாக பார்த்தபொழுது மட்டற்ற மகிழ்ச்சி.

அதாவது அச்சடிக்க இயலாத இந்த சூழ்நிலையிலும் வாசகர்களை சென்றடைய வேண்டும் என்ற ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது

நமது சமூக இதழின் வளர்ச்சியை நினைக்கும் பொழுது மிக பிரமிப்பாக இருக்கிறது. அதாவது 35 வருடங்களுக்கு முன்பு எனது தாத்தா வீட்டில் வரும் இதழை தவறாமல் படிப்பது உண்டு. அன்றைய காலகட்டத்தில் நமது பத்து ஊரில் இந்த இதழை எதற்காக அதிகம் பயன்படுத்தினார்கள் என்றால் நமது இன மாநாடு எங்கு நடந்தாலும் அதைப் பற்றிய விரிவான செய்தி இதில் இடம்பெறும்.

1987 ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற நமது மாநாட்டை விரிவாக இதழில் போட்டிருந்தார்கள். மாநாட்டில் கலந்து கொண்ட நாங்கள் அந்த மாத இதழை பார்த்து அறிந்து மகிழ்ந்தோம்.

ஆனால் நமது 10 ஊரை பற்றி எந்த செய்தியும் அந்தக் காலத்தில் அதிகம் இடம்பெறாது. ஆனால், தற்போது கடந்த ஐந்து வருடங்களாக நமது 10 ஊர் தெலுங்கு செட்டியார்களின் கோவில்களில் நடக்கும் அனைத்து விசேஷங்களும் முக்கியமாக கும்பாபிஷேகம் மற்றும் தேவாதி அம்மன் சாமி கும்பிடும் நிகழ்ச்சிகள் நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ள ஏதுவாக இருக்கிறது. இதற்கு அனேகமாக எங்கள் ஊரைச் சேர்ந்த நிருபர் திரு சுரேஷ் அவர்களின் பங்களிப்பு இருக்கலாம் என நினைக்கிறேன். இதற்கு உறுதுணையாக இருக்கும் சிறப்பு ஆசிரியர் கரூர் திரு. கே.சி.பழனிசாமி அவர்களுக்கும், ஆசிரியர் துரைஅங்குசாமி அவர்களுக்கும் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**- செந்தில்குமார்,**
ஊர் முன்னாள் பெரியதனம், பள்ளிபாளையம்.

நமது இனத்தின செய்திகளை முரசு கொட்டி அறிவிக்கும் குலமுரசு தங்கமே! மனதார உன் சேவையைப் பாராட்டுகிறேன். ஆசிரியர் துரைஅங்குசாமி ஐயா அவர்களையும் இந்தத் தருணத்தில் பாராட்ட நமது சமுதாயம் கடமைப்பட்டுள்ளது. குலமுரசு இதழ்கள் அனைத்து நமது சமுதாய மக்களிடையே சென்றடைய பாடுபடும் நிருபர் சுரேஷ் அவர்களை மனதார பாராட்டுகிறேன்.

**- கௌரிசங்கர்,** ஈரோடு.




# அரசி லாட்ஜ்

## அதிநவீன தங்குமிடம் மற்றும் உணவகம்



**K.C.பழனிசாமி** Ex.M.P., Ex.M.L.A.,




- **F** கரூர் பேருந்து நிலையத்திலிருந்து ½ கி.மீ. அருகாமையில்
- **E** ரயில் நிலையத்திலிருந்து ½ கி.மீ. அருகாமையில்
- **A** NH7 பிரதான சாலைக்கு ½ கி.மீ. அருகாமையில்
- **T** சுத்தமான மற்றும் தரமான உணவு வகைகள்
- **U** அனைத்து வகை உணவு வகைகளும் கொண்ட நவீன உணவகம்
- **R** தரமான சேவை குறைவான கட்டணத்தில்
- **E** உங்கள் தேவைக்கேற்ப ஏ/சி மற்றும் நான் ஏ/சி அறைகள்
- **S** வாகன நிறுத்துமிடம் மற்றும் 24 மணி நேர வாகன பாதுகாப்பு வசதி

LED Tv with all Prime Channels | Well Furnished AC Room | Laundry Service | Driver Accommodation | Cleaner on Call | Doctor on Call | Taxi on Call | ATM Facility | 24x7 Hot & Cold Water Supply | 24x7 Room Service | Credit / Debit Cards | Secured Car Parking









**506, ஜவஹர் பஜார், கரூர் - 639001.**

**தொலைபேசி: +91 (O) 4324-262663 கைபேசி: +91 98429 10022**

**E-mail: araseelodge@gmail.com Website: www.araseelodge.com**

# இறைவா வருக - என் இல்லம் வருக!

கோவிலுக்குப் போகிற யாரும் கடவுளைக் கையோடு வீட்டுக்குக் கூட்டி வர தயாராக இல்லை. அம்பலத்து இறைவரை அம்போ என்று அங்கேயே விட்டுவிட்டு வரவே விரும்புகிறார்கள். தனக்கு வேண்டும் போதெல்லாம் வந்து பார்த்துவிட்டு, தேங்காய் பழம் கொடுத்து வாங்காத வரமெல்லாம் வாங்க விரும்புகிறார்களே ஒழிய கையோடு கடவுளைக் கூட்டி வர ஒருவருக்கும் விருப்பம் இல்லை!

பெற்றவர்களையே முதியோர் இல்லத்தில் விட்டுவிட்டு அவசர ஆத்திரத்துக்குப் போய்ப் பார்த்துவர விரும்பும் நமது ஜனசமூகம், "கடவுளையாவது கையோடு கூட்டி வருவதாவது? பிறகு அந்த ஆளோடு யார் கஷ்டப்படுவது" என்கிறார்கள். ஒரு கதை சொல்கிறேன். அதன் பிறகாவது இந்த ஆசை யாருக்காவது வருகிறதா பார்ப்போம்!

ஒரு மகாராஜா காட்டிலே வேட்டைக்குப் போனார். கூட வந்த படை குடிகளை விட்டுப் பாதை மாறிக் காட்டுக்குள் போய்விட்டார். வசமாகத் திருடர்கள் மத்தியில் அகப்பட்டுக் கொண்டார். ஆபத்தில் அலறினார் அரசர். நல்ல வேளையாக காட்டில் வாழும் எளிய ஏழைகள் ஆறு பேர் எதேச்சையாக அந்த வழியில் வந்து கொண்டிருந்தனர். அரசர் என்று அறியாமலேயே ராஜாவைக் காப்பாற்றித் திருடர்களை அடித்து விரட்டினர். அதற்குள் ராஜாவின் படை அங்கே தேடி வந்துவிட்டது.



சொல்வேந்தர் சுகிசிவம்

அரசர் ஆறு பேரையும் அரண்மனைக்கு அழைத்து வந்து விருந்து கொடுத்து ஒரு வாரம் தங்க வைத்துப் பரிசுகள் கொடுத்து அனுப்ப நினைத்தார். விருந்து முடிந்து புறப்படும் போது அவரவர் கேட்கும் பரிசுகள் தருவதாக வாக்களித்தார்.

முதல் நபர் பசியோடும் பட்டினியோடும் போராடி வருவதாகவும் கொஞ்சம் நிலம் கொடுத்தால் உதவியாக இருக்கும் என்றான்.

இரண்டாவது நபர் தொழில் செய்ய பணம் தேவை, அதற்கு முதலாக அரசர் தன்னை நம்பிச் சிறிது பணம் தரும்படி வேண்டினான்.

மூன்றாவது நபரோ தனக்கு ஏதும் கேட்காமல் தனது ஊர்க் கோவிலுக்கு அரசர் நன்கொடை தரும்படி கேட்டான். நான்காவது மனிதனோ ஊருக்குப் பாதையும் குடிநீரும் ஏற்பாடு செய்ய வேண்டினான்.

ஐந்தாவது நபர் தனது திருமணத்திற்கு அரசர் நேரில் வந்து பரிசளித்துக் கவுரவிக்க வேண்டும் என்றான். இப்போது ஆறாவது நபர் கேட்க வேண்டும்.

கொஞ்சம் தயங்கியவன் பிறகு தைரியத்துடன் அரசரைப் பார்த்து, "ஆண்டுதோறும் உங்களை நாங்கள் காப்பாற்றிய இந்த நல்ல நாளில் எளியவனாகிய இந்த ஏழையின் வீட்டுக்கு மகா அரசர் எழுந்தருளி, நான் தரும் எளிய உணவை ஏற்று என்உடன் தங்கி என்னை அரசர் பெருமைப்படுத்த வேண்டும்" என்று அன்பொழுக வேண்டினான்.

தன்னிடமிருந்து எதையும் பெற விரும்பாது தான் ஏதாவது தரவேண்டும் என்று நினைக்கிற ஏழையின் அன்பு அரசரை நெகிழ வைத்தது. அவனைக் கட்டித் தழுவிக் கண்ணீருடன், ஆண்டுதோறும் அவன் இல்லம் வருவதாக அரசர் உறுதியளித்தார். மற்ற யாவருக்கும் அவரவர் கேட்ட பரிசுகள் தரப்பட்டன.

அடுத்த ஆண்டு அரசர் அவன் இல்லம் வரவேண்டிய காலம். ஏழையின் வீட்டுக்கு வருகிற பாதை சரியில்லை என்று சேனாபதி பாதையைச் செப்பனிட உத்தரவிட்டார். அரசர் தங்க வேண்டுமே என்று கவலைப்பட்ட முதலமைச்சர் ஏழையின் வீட்டையே அரண்மனை மாதிரி மாற்றி அமைத்தார். அரசருக்கு ஏற்ற உணவாக இருக்க வேண்டுமே என்று மகாராணி முன்கூட்டியே சமையல் கலைஞர்களை அனுப்பி வைத்தார். எத்தனைபேர் வந்தாலும் சாப்பிட வேண்டுமே என்று ஏகப்பட்ட அரிசியும் பண்டங்களும் வந்து இறங்கின.

இப்படி அரசர் வந்து போகும் தினம் வரவர வெகு சிறப்பாகி ஒரு திருவிழாவாகவே ஆனது. ஊரார் நன்மை பெற்றனர். ஒருமுறை அரசரோடு தானும் வருவேன் என்று பிடிவாதம் செய்து உடன் வந்த இளவரசி, அந்த இளைஞன் பண்பை மெச்சினாள். அழகு, அறிவு கண்டு நெஞ்சைப் பறிகொடுத்தாள். அரசனும் நெகிழ்ந்து மகள் விரும்பியபடி மணமும் செய்து கொடுத்தான். அரசனுக்கோ மகன் இல்லை. எனவே முதுமைக் காலத்தில் மருமகனை அழைத்து நாட்டையே கொடுத்து ஆளச் செய்தான். எப்படிக் கதை பார்த்தீர்களா?

கோவிலுக்குப் போய் அதையும் இதையும் கேட்டு வாங்கி வருகிறவர்கள் நான் முன்னால் சொன்ன ஐந்து நபர்கள். அரசனிடம் சின்ன சின்ன பரிசு பெற்றார்கள்.

ஆனால் அரசனைத் தன் வீட்டுக்கு அழைத்தவன் எவ்வளவோ மேன்மை பெற்றான். அரசும் பெற்றான். அந்த ஆறாவது நபர்தான் ஞானிகள். ஞானிகள் கடவுளைத் தன் நெஞ்சு வீட்டுக்கு அழைக்கிறார்கள். நினைப்பவர் மனமே கோயிலாய்க் கொண்டு கடவுள் குடியேறுகிறார். அவ்வளவுதான் அங்கு சகல ஐஸ்வர்யங்களும் குடிபுகுந்து விடுகின்றன. இறுதியில் மோட்ச சாம்ராஜ்யம் பெற்று அவர்கள் முக்தி பெறும் போது அவர்கள் வாழ்ந்த இடமே கோவிலாகி விடுகிறது!




KANTHASWAMY
RAISING SUN
BRAND
PALAKKAD

# வருந்துகிறோம்



வடுகபட்டி பேரூராட்சி முன்னாள் தலைவரும், தேனி மாவட்ட
24 மனை தெலுங்குபட்டி செட்டி உறவின்முறை முன்னாள் தலைவருமான

திரு. **கே.பி.துரைராஜ்** அவர்கள்
07-05-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.



கோவை மாவட்டம், தொண்டாமுத்தூர் ஒன்றியம்,
மதுவராயபுரம் ஊராட்சி மன்ற முன்னாள் தலைவர்
திரு.**பி.எஸ்.டி.குணா** அவர்களது தாயார்

திரு.**ரங்கம்மாள்** அவர்கள்
10-05-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.



உடுமலைப்பேட்டை காமாட்சியம்மன் கோவில்
முன்னாள் கமிட்டி உறுப்பினர் சாக்குமண்டி அமரர்
திரு. **R.V.சுப்பிரமணிய செட்டியார்** அவர்களது
துணைவியாரும், உடுமலை 24 மனை இளைஞர்
நற்பணி மன்ற நிர்வாகி திரு.**R.V.S.ஆறுமுகம்**
அவர்களது தாயாருமான

திருமதி. **R.V.S.பார்வதி அம்மாள்** அவர்கள்
13-05-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.

இவர்களது மறைவுக்கு குலமுரசு தனது ஆழ்ந்த இரங்கலையும்,
அஞ்சலியையும் தெரிவித்துக் கொள்கிறது.



தேனி மாவட்ட 24 மனை தெலுங்கு பட்டி செட்டி
உறவின்முறை முன்னாள் தலைவரும்,
வடுகபட்டி பேரூராட்சி முன்னாள் தலைவருமான
சேவாரத்னா, அமரர் **கே.பி.துரைராசு**
அவர்களின் மறைவையொட்டிய இரங்கற்பா

காலத்தைக் கணிப்பவனே
காலனே !
கணக்கில் தவறிவிட்டாயே
காரணம் ஏன் ஐயனே ?

கணிப்பதில் பிழைத்தால்தான்
கடுகியே எங்கள் ஐயா
வடுகபட்டியாரை
விரைந்துநீ அழைத்துச் சென்றாயோ ?

எல்லார்க்கும் இனியராய்
இலங்கினாரே காலமெல்லாம் !

பிள்ளைமனம் கொண்டே
பெரிதினிக்கப் பேசுவாரே !

ஊர்ப்பணி இனப்பணி
என்றாலே
ஓடோடி உழைப்பாரே !

தொல்லை என்று எவர்வரினும்
ஒல்லையே விரைந்தேசித்
துயர்துடைப்பார் ! துன்பம் தணிப்பார் !

தேனி மாவட்டத்துத்
தெலுங்குச் செட்டியாரின்
துணையாய்த் துலங்கினாரே - தாங்கும்
தூணாய்த் திகழ்ந்தாரே !

திண்டுக்கல் மாநாட்டுக்கு
தென்மாவட்ட தெலுங்கினத்தை
திரட்டி வந்த தளபதியே !

ஏழையர்க்கு இரங்கியே,
ஈகைமனம் மிகக்கொண்டே
வாரி வழங்கினாரே !
வள்ளலென விளங்கினாரே !

ஏழை மாணவர்க்காய்,
ஈன்றதாய் இராசம்மாள்
இனிய நினைவாலே
கல்வி அறக்கட்டளை
கண்டாரே !
கல்வி பல்லோர்க்கும்
கனிவுடனே தந்தாரே !

நல்லோர் இம்மண்ணில்
நீண்டநாள் வாழ்தல்
கூடாது என்றே
கூறிவிட்டாரே நின்சாத்திரம் ?

இன்னமும் அவரிங்கு
இருந்திருந்தால்
இன்னமும் எங்களுக்கு
நலன்கள்பல கிட்டியிருக்கும் !
நன்மைகள்பல வாய்த்திருக்கும் !

நல்லோர் அவரென்பதால்
உள்ளத்தால் நீயும் அவரை
விரும்பினை போலும்
விரைந்தழைத்துக் கொண்டாயோ ?

உனக்கிது விளையாட்டு !
எங்களுக்கோ இதுபெரும்
இன்னலே !

ஆற்றாதே நாங்கள்
அழுகின்றோம் ஐயனே !

வேண்டுதல் ஒன்று !
அவர் ஆன்மா நிறைவுறவே
ஆவனவே செய்திடுவாயே !



இரங்கற்பா கவிதை:
பெரும்புலவர்
**பண்ணை கோமகன்**
வத்தலக்குண்டு.



# பிஸ்தா பருப்பு

பிஸ்தாவின் தாவரவியல் பெயர் பிஸ்தாசியோ வீரா. இது அனகார்டியேசியே குடும்பத்தை சார்ந்த சிறு மர வகையைச் சார்ந்த தாவரமாகும்.

30 வகையான வைட்டமின்கள், மினரல்கள், கார்போஹைட்ரேட், புரோட்டீன்கள், நார்ச்சத்துக்கள், பீட்டா-கரோட்டீன், கால்சியம், நியாசின், நல்ல கொழுப்பு, காப்பர், பொட்டாசியம், இரும்புச்சத்து, மக்னீசியம், செலினியம் மற்றும் ஜிங்க் போன்ற கனிமச்சத்துக்கள் உள்ளிட்ட பல வகையான சத்துக்கள் பிஸ்தாவில் நிறைந்துள்ளன.

மத்திய கிழக்கு பகுதியில் முதன் முதலாக கண்டுபிடிக்கப் பட்ட பிஸ்தா மரம், உலகின் மிகப் பழமையான பருப்பு வகை மரங்களுள் ஒன்றாகும்.



கி.மு.7 ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பே மனித இனம் இந்த பிஸ்தா மரத்தை பயிரிட்டு, அதன் பலனை அனுபவித் துள்ளது. ஈரான் மற்றும் ஈராக் நாடுகளில் தோன்றி, தற்போது சிரியா, லெபனான், துருக்கி, கிரீஸ், இந்தியா, பாகிஸ்தான், இத்தாலி, உஸ்பெகிஸ்தான், ஆப்கானிஸ்தான் மற்றும் அமெரிக்கா போன்ற நாடுகளில் பயிரிடப்படுகிறது.

அமெரிக்காவில் 1903 முதல் அங்குள்ள கலிபோர்னியா மாகாண பகுதிகளில் இந்த மரங்கள் அதிக அளவில் பயிர் செய்யப்பட்டன. உலகிலேயே இங்குதான் அதிக அளவில் பிஸ்தா உற்பத்தி செய்யப்படுகிறது.

## பிஸ்தாவின் பயன்கள்

### நோய் எதிர்ப்பு சக்தி

பிஸ்தாவில் அதிக அளவில் வைட்டமின் பி6 உள்ளது. இது, இரத்ததில் ஹீமோகுளோபின் உற்பத்திக்கு மிகவும் அவசிய மானது. அதோடு மட்டுமில்லாது செல்களுக்கு ஆக்ஸிஜனை கொடுக்கிறது.

வைட்டமின் பி6 ஆனது, மனிதனுக்கு நோய் எதிர்ப்புத் திறனை தருவதோடு மட்டு மில்லாமல் வெள்ளை மற்றும் சிவப்பு இரத்த அணுக்களை உற்பத்தி செய்து மண்ணீரல் மற்றும் நிணநீரை பராமரிப்பதிலும் மிக முக்கிய பங்கு வகிக்கிறது. மேலும் ஒரு

மனிதனுக்கு வைட்டமின் பி6 குறைவாக இருந்தால் கண்டிப்பாக நோய் எதிர்ப்பு திறன் குறைந்து எளிதில் நோய் தொற்று ஏற்படுகிறது.



### அழகான தோல்

பிஸ்தாவில் வைட்டமின் ஈ மிகுந்துள்ளதால், இது தோல் முதிர்ச்சியடைவதை தடுத்து அழகான தோலினை தருகிறது. மேலும் வைட்டமின் ஈ ஆனது புறஊதாக்கதிர்களால் தோல் பாதிப்பாகாமல் இருக்கவும் மற்றும் தோல் புற்றுநோய் வராமல் இருப்பதிற்கும் உதவுகிறது.

### ஆரோக்கியமான பார்வை

பிஸ்தா பருப்பில் சியாசாந்தின் (Zeaxanthin) மற்றும் லூட்டின் (Luetin) என்ற இரண்டு கரோட்டினாய்டுகள் காணப்படுகிறது

இந்த கரோட்டினாய்டுகள் கண்ணின் விழித்திரையை சீரழியாமல் பாதுகாத்து கண்பார்வைக்கு வழிவகுக்கிறது. மேலும் இவ்விரு கரோட்டினாய்டுகளும் புற ஊதாக்கதிர்களினால் தோல் பாதிப்படையாமல் தடுப்பதற்கும், இருதய நோய்கள் வராமல் தடுப்பது மற்றும் கண்புரை (Cataract) நோய்களிலிருந்து கண்களை பாதுகாப்பதிலும் முக்கிய பங்கு வகிக்கிறது

### நீரிழிவு நோயாளிகளுக்கு நன்மை

பிஸ்தாவில் பாஸ்பரஸ் ஆனது அதிக அளவில் உள்ளதால், குளுக்கோஸை அமினோ அமிலமாக சிதைக்கிறது. இதனால் நீரிழிவு நோயாளிகளுக்கு பிஸ்தா ஒரு நல்ல பயனுள்ள உணவாகும்.

### இருதய நோய் அபாயத்தை குறைத்தல்

பிஸ்தா உடலில் உள்ள கெட்ட கொழுப்பினை குறைத்து (LDL - Low density lipoprotein) நல்ல கொழுப்பினை (HDL - High density lipoprotein) அதிகரிக்க செய்யும் என்று கூறப்படுகிறது. இது, மனிதனுக்கு இதய நோய்கள் ஏற்படும் அபாயத்தை குறைக்க உதவுகிறது.

பிஸ்தா பருப்பில் டெரிபின்திணேட், இனிப்புச் சுவையுடைய நறுமண எண்ணெய், காலோடானிக் அமிலம் ஆகியன காணப்படுகின்றன. இவை நரம்பு மணடலத்தை தூண்டி, ஹார்மோன்களின் சுரப்பை அதிகப்படுத்தி, புத்துணர்ச்சியை உண்டாக்குகின்றன.

பிஸ்தா பருப்பை இளவறுப்பாக வறுத்து, ஒன்றிரண்டாக இடித்து, கற்கண்டு சேர்த்த பாலுடன் கலந்து தினமும் 1 முறை சாப்பிட தேகம் ஆரோக்கியமடைவதுடன் பாலுறுப்புகள் வலுவடைகின்றன.

பிஸ்தா பருப்பை நெய்விட்டு வறுத்து, ஒன்று அல்லது இரண்டு தினமும் சாப்பிட செரிமான சக்தி அதிகப்படுவதுடன் சுறுசுறுப்பு உண்டாகும். பிரசவித்த பெண்கள் பிஸ்தா பருப்பை பாலுடன் வேகவைத்தோ அல்லது நெய்யில் பொரித்தோ சாப்பிட தாய்ப்பால் நன்கு சுரக்கும்.

ஆண், பெண் இருபாலரும் பிஸ்தா பருப்பை சூடான பாலில் ஊறவைத்து தினமும் மாலையில் சாப்பிட போக சக்தி அதிகரிக்கும்.

Published by Dr. Durei Angusamy on behalf of 24 Manai Telugu Chettiar Charitable Trust from 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 10. and Printed by S.Radhakrishnan at Sri Jayalakshmi Art Printers, 333, Puthu Nagar West Avenue, M.K.B. Nagar, Vyasarpadi, Chennai - 39. **Editor: Dr. Durei Angusamy**

# ஈகையும் இரக்கமும்



கவிஞர் மீரா

ஈகையும் இரக்கமும்
இலக்கிய வழக்காய்
இருக்கும் எதையும்
அகராதி வார்த்தையாய்
ஆன இரக்கமும்
எல்லா
இதயங்களிலும்
இரண்டறக் கலந்தால்
ஆனந்தம் பிறக்கும்
அகிலம் தழைக்கும்.

இரக்கம் காரணம்
ஈகை காரியம்
காரணமின்றிக்
காரியம் இல்லை
அதனால் தான்
எழுத்தில் முதலில்
'இ'வரும்; அடுத்து
'ஈ'கைக்குரிய 'ஈ' வரும்.

வெல்லுவதை இரக்கமின்றிக்
கொல்லுவதை வீரம் என்று
நினைத்ததெல்லாம் பொய்யாக்கி
உயிர்களிடம் அன்பு வைத்து
ஈ எறும்பைக் கூடக்
கொல்லாத
இரக்கமனம் கொண்டவரை
ஈகை மதம் கண்டவரை
மகாவீரர் என்றே
வையம் துதிக்கிறது.

கொஞ்சம் கொடுத்தால்
நன்கொடை
கூடக் கொடுத்தால் கொடை
அள்ளிக் கொடுத்தால்
வள்ளன்மை

ஆனாலும்
அருட்பெருஞ்சோதி
வடலூர்க் கருணை நிதி
வாடிய பயிரைக் கண்டபோது
வருந்தியதால்
வள்ளலார் என்றே
வையம் மதிக்கிறது.

மாவீரர் ஆவதற்கும்
வள்ளலார் ஆவதற்கும்
ஒரே ஒரு வழி
இரக்கத்தை
வளர்ப்பது தான்.

குடுகுடு கிழவர்களை
கூன்விழுந்த கிழவர்களைத்
தொண்டு கிழம் என்பார்கள்.

அன்னை தெரசாவை
அந்த அர்த்தத்தில்
அழைக்க மாட்டோம் நாம்...



எங்கோ பிறந்து
இங்கு வந்து
ஏழை எளியவர்க்
கிரங்கி உதவினார்
தொழுநோயாளர்களைத்
தொட்டுச் சேவை செய்தார்...
தொண்டு செய்து
தொண்டு செய்து பழுத்தார்
அன்னை தெரசாவை
அகிலம் தழைக்க வந்த
தொண்டு கிழம் என்று
கண்டு கொண்டோம் நாம்.

பாவம் பிச்சைக்காரன்... என்று
பரிதாபப் பட்டுநான்
சில்லறை இல்லாததனால்
முழுரூபாய் நாணத்தைப்
முகமலர்ச்சியோடளித்தேன்...

என்
ஈகைக் குணத்துக்கு
மனதுக்குள் மாலையிட்டேன்.
'இந்த நிலை வந்ததுனுக்கு
ஏனப்பா' என்றேன். சட்டென்று
'உன்னைப் போல்தான் ஐயா
கணக்குப் பார்க்காமல்
கண்டபடி விரயம் செய்து
திருவோடேந்தித்
திரிகிறேன்' என்றான்...
திகைத்தேன் நான்...



காவிலிபாளையம் ஸ்ரீ அங்காளபரமேஸ்வரி



"எங்களது
Guru,
Guide &
Godfather
வள்ளல் KCP
அவர்களின் சமுதாயப் பணி
இன்று போல் என்றும்
சிறந்தோங்க வணங்கி வாழ்த்தும்

துரை கிருஷ்ணராஜ்
ஆனைமலை மாசாணியம்மன் திருக்கோவில்
முன்னாள் அறங்காவலர், பொள்ளாச்சி



**VMD SONS**
Dealers & Exporters of Rice &
Food Products
227, Market Road, Pollachi - 642 001.
Phone: 04259 - 326444 / 226649 / 326777

